# "செந்தமிழ்ச் செல்வி"

## (செந்தமிழ்த் திங்கள் வெளியீடு)



---

# உள்ளுறை

செந்தமிழ்ச் செல்வி

திங்கள் வெளியீடு

சிலம்பு-ருக  தி. வ. ஆண்டு உ0கரு, புரட்டாசி  பரல்-உ

அக்டோபர் 1984

# மாமன்னன் முடிசூட்டு விழா

தமிழக வரலாற்றில் சோழ மன்னர்களின் ஆட்சிக்காலம் ஒரு பொற்காலம். சோழநாடு சோறுடைத்து என்னுமளவிற்கு வளம் பெற்றுத் திகழ்ந்தது அக்காலம். மன்னர்கள் குடிதழீஇக் கோலோச்சும் செங்கோலர்களாக இருந்தமையால் மக்கள் நலமுடன் வாழ்ந்தனர்.

இத்தகைய சோழர் மரபில் தோன்றியவன் இராசராச சோழன் என்னும் மன்னர் மன்னன். இவன் கி. பி. 985 முதல் 1014 வரை செங்கோலோச்சினான். இவனது அரசியல் ஐம்பெருங் குழு, எண் பேராயம், அறங்கூறு அவைகள் இவற்றைக் கொண்டதாய் இருந்தது. இவனது புகழ் இமயம்வரை பரவியிருந்தது.

இராசராச சோழன் ஒரு வீர மன்னனாக வாழ்ந்ததோடு இறைப் பணிகளில் பேரீடுபாடு கொண்டு. திருக்கோயில்கள் அமைத்து அத் திருப்பணிகளில், சிற்பமும் ஓவியமும் வளர வழிகண்டான். சைவமும் தமிழும் தழைக்க இவன் ஆற்றிய அரும்பணிகள் மிகப்பல. இப் பேரரசனின் இறைப்பற்றினையும் கலைப்பற்றினையும் உலகிற்குப் பறைசாற்றி நிற்கிறது தஞ்சைப் பெரிய கோயில்.

ஒருகாலத்தில் தில்லையில் மறைந்திருந்து சிதல்களுக்கு இரை யாகிக்கொண்டிருந்த மூவர் தேவாரச் சுவடிகள் இராசராசனின் பெருமுயற்சியால் தேடிக் கண்டெடுக்கப்பட்டன. அஃதின்றேல் அரிய திருமுறைகள் இருக்குமிடந் தெரியாமல் அழிந்துபோ யிருக்கும்.

இங்ஙனம் பல்லாற்றானும் புகழ்பெற்று, வல்லவனாகவும், நல்லவ னாகவும் விளங்கிய இம் மன்னனின் புகழ் நிலைத்து நிற்கத் தஞ்சைப்

பெரிய கோயில் வளாகத்தில் நிறுவப்பட்டுள்ள இவனது சிலைக்கு முடிசூட்டுவிழா கடந்த செப்டம்பர் 16, 17ஆம் நாட்களில் சீருஞ் சிறப்புமாக நடைபெற்றது. இராசராச சோழன் முடிசூடி ஆயிரம் ஆண்டுகள் நிறைவுறுவதை நினைவு கூருமுகத்தான், தமிழக அரசால் அப் பெருமன்னனுக்கு இப் பெருவிழா எடுக்கப்பட்டது.

ஏறத்தாழ முப்பது ஆண்டுகளாகத் தமிழகத்தில் வளர்ந்துவரும் தமிழ் உணர்வின் விளைவுகளில் இதுவும் ஒன்று. தமிழ் மாநிலம் தனித்தியங்கியது மட்டுமின்றி ஆட்சிப் பீடத்தில் அமர்வோர் தமிழுணர்வு பெற்றவர்களாக இருத்தல் வேண்டும் என்பதும் இதன் உட்கிடக்கையாகும்.

அந்த வகையில், ஒரு தமிழ் மன்னனை மக்களுக்கு அறிமுகப் படுத்தி விழாவெடுத்த தமிழக அரசினையும், அதன் தலைவர் மாண்பு மிகு புரட்சித் தலைவர் அவர்களையும், அடிநாளில் இதற்கு வித் தூன்றியவர்களையும் நினைந்து மகிழ்ந்து பாராட்டுகிறோம்.

'யாதும் ஊரே யாவரும் கேளிர்' என்னும் தமிழினத்தின் குறிக் கோளை வரலாற்றில் இடம்பெறச்செய்ய ஆந்திர மன்னனான சாளுக் கிய மன்னன் விமலாதித்தனுக்குப் பெண் கொடுத்து அவனோடு உறவு கொண்டவன் இராசராசன். அவ்வகையில் இவ்விந்தியத் துணைக் கண்டத்தின் ஒருமைப்பாட்டுக்கு ஆயிரம் ஆண்டுகட்கு முன்னரே வித்தூன்றியவன் என்ற முறையிலும் அம் மன்னனுக்கு எடுக்கப்பட்ட இவ்விழா சாலப் பொருத்தமுடைத்தாகும்.

அனைத்துக்கும் மேலாகப் பாரதத்தின் தலைமை அமைச்சர் திருமதி இந்திரா காந்தி அவர்களே வந்திருந்து இராசராசன் சிலைக்கு முடிசூட்டிய காட்சியும் கருத்தும் எண்ணி மகிழத்தக்கன. இவ் விழாவின் மூலம், ஒருகாலத்தில் நாடாண்ட பெரிய இனம் இத் தமிழினம் என்ற வரலாற்றை இந்தியாவிலுள்ள பிற மாநிலத்தாரும் அறிந்துகொள்ள வாய்ப்புக் கிடைத்தமையினையும் நினைந்து மகிழ் கிறோம்.

இவ் விழாவினை இத்துணைச் சீருஞ்சிறப்புமாக நடத்த எல்லா ஏற்பாடுகளையும் செய்த தமிழக அரசினையும், முதல்வர் புரட்சித் தலைவர் அவர்களையும் பாராட்டுகிறோம். அத்துடன் தஞ்சைப் பெரிய கோயிலின் உள்ளேயே இராசராசன் சிலையை அமைக்கவேண்டும் என்னும் வேண்டுகோளுக் கிசைந்து தமிழக அரசுக்கு இசைவளித்த நடுவண் அரசையும் பாராட்டுகிறோம்.

---

# ‘பல்’

## [கழக இலக்கியச் செம்மல், புலவர் இரா. இளங்குமரன்]

பற்று என்பது ‘பல்’ என்பதன் வழியாக வந்த சொல் என்பதை முன்னைப் பரலில் கண்டோம். பல் என்பதன் பொருள் என்ன ?

‘பல்’ என்பது வெண்மை குறித்த சொல். ‘பல பல’ என விடிந்தது என்னும் வழக்கிலும், ‘பால்’ என்னும் சொல்லிலும் வெண்மைப் பொருள் உளதாதல் அறிக. பல், பால் என்பவை போலக், கல், கால் என்பவை கருமைப் பொருள் தருதலையும் ஒப்பிட்டுக் காண்க.

பல் என்பது ‘பள்’ எனத் திரிந்தும் வெண்மைப் பொருள் தருதலைப் பளபள, பளப்பளப்பு, பளிச்சிடல் என்பவற்றிலும் பளிக்கு பளிங்கு என்பவற்றிலும் காண்க. இவ்வாறே கல் என்பது ‘கள்’ எனத் திரிந்து கருமைப் பொருள் தருதலைக் களம், களவு, களர், கள்ளம், கள்வன் முதலிய சொற்களைக் கொண்டு தெளிவு செய்து ஒப்பிட்டுக் கொள்க.

வெண்மைப் பொருள் தரும் ‘பல்’ பின்னர்ப் பன்மைப் பொருள் தருவதாய் விரிந்தது. எப்படி ?

உடற் பொறிகளை மெய், வாய், கண், மூக்கு, செவியென எண்ணுவர். இவற்றுள் வாயின் உள்ளுறுப்புகளில் ஒன்றாகியது பல். இதனைப் பெருக்கல் வாய்பாடு போல, “எண்ணான்கு முப்பத்திரண்டு பற்காட்டி” என்கிறது ஒரு தனிப்பாட்டு.

கண்கள் இரண்டு; காதுகள் இரண்டு; ஆனால் பற்களோ முப்பத்திரண்டு. அவையும், கண்கள் காதுகள் போலத் தனித்தனி நின்றன அல்ல, தொடுத்துப் பத்தியாய் அமைந்துள்ளன. “முல்லை யரும்பையோ முத்தையோ கோத்து வைத்த கோவை” என்ன உவமைத் தொடைபடக் கூறப்படுவனவாயின. இப் பல்லின் வரிசையே ‘பல’வென்பதை அல்லது பன்மையை வழங்கும் குறியாயிற்றும்.

உழவுக் கருவிகளுள் ஒன்று ‘பலகுச் சட்டம்’; அதனைப் பயிருடு அடித்தலைப் ‘பல கடித்தல்’ என்பர். ‘பலகு’ ‘பலுகு’ எனவும் வழங்கும். களை குத்திபோல் பல் பல்லாகிய முளைகளை யுடையது அப் பலகு என்பதை அறிபவர், அதன் பெயர்ப் பொருளைத்

தெளிவாக அறிவர். பல கடித்தலைப் 'பல்லியாடுதல்' என்பது பண்டையோர் வழக்கு.

''பூமி மயங்கப் பலவுழுது வித்திப்
பல்லி யாடிய''

என்பது புறப்பாட்டு (120). பல்லியாடுதலைத் 'தாளியடித்தல்' என்பார் புறநானூற்று உரைகாரர். 'ஊடடித்தல்' என்பது இக்கால வழக்கு.

பலகு அமைப்பைத் தலை சீவும் சிப்புடன் ஒப்பிட்டு வடிவமைப்புக் காண்க. 'சிப்புப் பல்' 'பல்போன சிப்பு' என்னும் வழக்குகளையும் கருதுக. கொழுவொடு சேர்க்கப்பட்டதும் பற்கள் உள்ளதுமான பலகையோடு அமைந்த கலப்பை, 'பல்லுக் கலப்பை' எனப்படுதலை யும், செங்கல் கட்டட மேல் தளத்தில் ஒன்றுவிட்டு ஒன்று வெளியே நீட்டி வைக்கப்பெறும் செங்கல் வரிசை 'பல்லு வரி' எனப்படுதலை யும் எண்ணலாம்.

ஈரவெண்காயம், வெள்ளைப்பூண்டு, ஆகிய இவற்றின் பிளவுகள் அல்லது கப்புகள் 'பற்கள்' என்றே வழக்கில் இன்றும் உள்ளன. பல் பல்லாக எடுத்தே நடவு செய்தலும் கண்கூடானதே. சிற்றூர்ப் பல சரக்குக் கடைகளில் ''பூடு ஒரு பல்லுக் கொடுங்கள்'' என்று கேட்டு வாங்குதல் அண்மைக் காலம் வரை நடைமுறையில் இருந்த தேயாம்! இவற்றிலெல்லாம் 'பல்' தன் மூலமாம் ஒளிப் பொருளை யும் பன்மைப் பொருளையும் இழந்து 'ஒருமை' சுட்டி வந்ததாம்.

'முப்பழம்', வாழை, மா, பலா என்பவை. இவற்றுள் பலா, 'சுளை' எனப்படும். ''கனியிடை ஏறிய சுளை'' என்னும் பாவேந்தர் வாக்கில் வந்த கனி பலாக்கனி என்பது எவரும் அறிந்ததே. பலாக் கொட்டையின் வடிவை ஊன்றிக் காண்பார் வண்ணமும் வடிவமும் பல்லோடு ஒத்திருப்பதைக் காண்பர். அதன் பெயரீட்டையும் அறிந்துகொள்வர். பல் போன்ற கொட்டையுடையதும், அவற்றை யும் பலவாகக் கொண்டதும் 'பலா' எனப்பட்டதாம். பர், பல், பலா என வரல் உண்மையால் அதற்குப் பருமைப் பொருளும் உண்டாம்.

பலாச் சுளை என்பது போலவே, 'பருத்திச் சுளை' என்பதும் வழக்கே, பருத்தி 'சுளைத் திருக்கிறது' என்பது பருத்தி வெடிப்பைக் குறிக்கும். 'பருத்திச் சுளை' எடுப்பார்க்குப் பருத்தியே கூறிட்டுக் 'கூலி'யாகத் தருதல் வழக்கம். பருத்தி எடுக்கப்பட்ட 'கொலுக்கு' பல் பல்லாக இருக்கும். முள்ளைப்போல் குத்தவும் செய்யும். அதனை உணர்ந்து பருத்திக்குப் பல் எனப் பெயர் வைத்தனர். அது பன்' எனவும் 'பன்னல்' எனவும் இலக்கண இலக்கியங்களில் குறிக்கப்படு கிறது.

*''மின்னும் பின்னும் பன்னும் கன்னும்*
*அந்நாற் சொல்லும் தொழிற்பெயர் இயல''*

என்பது தொல்காப்பியம் (345).

*''பன்னல் வேலிப் பணைநல் லூரே''*

என்பது புறநானூறு (345).

பருத்தி, 'வேலிப் பயிரோ' என்பாராயின், ''பருத்தி வேலிச் சீறூர்'' என்னும் புறநானூறு தெளிவிக்கும் (299). இந்நாளில் 'வேலிப் பருத்தி' என ஒரு பருத்தி வேலிப் புறங்களில் இருத்தல் அறிக.

'பன்' ஆகிய பருத்தியில் இருந்து எடுக்கப்பட்ட நூல் 'பனுவல்' எனப்பட்டது. பின்னர், அவ் ஆடை நூலைக் குறித்த 'பனுவல், அறிவு நூலையும் குறித்தது.

*''பஞ்சிதன் சொல்லாப் பனுவல் இழையாகச்*
*செஞ்சொல் புலவனே சேயிழையா—எஞ்சாத*
*கையேவா யாகக் கதிரே மதியாக*
*மையிலா நான்முடியு மாறு''*

என்று பனுவலை ஒப்பிட்டுப் பகர்கின்றது நன்னூல் (24)

பல் 'பன்' ஆகுமா? கல் 'கன்' ஆனதே! கன்மாப் பலகை எனச் சங்கைப் பலகை வழங்கப்பெற்றதே!

பல் பல்லாய் அமைந்த அறுவாள் 'பன்னறு வாள்' எனப் படுவதையும், அதன் பற்களைக் கூராக்குவதைப் 'பன்னு வைத்தல்' எனப்படுவதையும் நாட்டுப் புறங்களில் நன்கு அறியலாமே!

பலமொழி வல்லார் பன்மொழிப் புலவர் எனப்படுதலையும் பல்கால் சொல்லியதையே சொல்லுதல், 'பன்னுதல்' 'பன்னிப் பன்னிப் பேசுதல்' என்று வழங்கப்படுதலையும் தெளிக.

பனை என்னும் தொல்புகழ் மரத்தை அறிவோம். தென்னை, புன்னை என்பவை போலப் பன்னை என்பதே அதன் மூத்த பெயராக இருந்து இடைக் குறை எய்தியிருக்க வேண்டும். குமரிக்கண்ட நாளிலேயே, 'ஏழ்பனை நாடு' பேசப்படுதலாலும், பனைக் கொடியும் பனம்பூமாலையும் சேரர்க்குரியவை ஆதலாலும் அவற்றைத் தொல் காப்பியமும் சுட்டுதலாலும் 'பனை' என்னும் வடிவம் மிகப் பழமையே வந்துவிட்டது என்பதைக் கொள்ள வேண்டும். எவ்வளவு காலம் கடந்தாலும் சில அடிமூலங்கள் உண்மையை விளக்கி உறுதி செய்து விடுகின்றனவாம்!

பதனீரை வடித்தற்குப் பயன்படுவது பன்னாடை. அது பனை மடலைச் சூழ்ந்து வலைபோல் இருக்கும் நார் ஆடையைக் கூட்டிப் பிடித்து அமைத்ததாம். 'பன் ஆடை' பன்னாடை ஆயிற்று. இழை கலக்கமான உடையையும் நெய்யரியையும் பன்னாடை என்பதும் வழக்கம்! பன்னாடையில் அமைந்துள்ள 'பன்' 'பன்னை' என்பதன் முந்தை மூலம் காட்டுவதாம். தென்னை ஓலை 'தென்னோலை' ஆனாற் போலப் பன்னை ஆடை 'பன்னாடை' ஆயிற்றாம். தென்னவன் கூடலில் ஒரு தெரு 'தென்னோலைக் காரத் தெரு' என்பது.

பனைக்கும் பல்லுக்கும் என்ன தொடர்பு? பனையின் அடிமரப் பரப்பெல்லாம் பல்பல்லாய்—செறும்பு உடையதாய்—இருப்பது பொருள் விளக்கம் செய்வதாம். 'இரும்பனஞ் செறும்பு' என்னும் அகநானூறு (277). செறும்பு 'சிறும்பு' என வழக்கில் உள்ளது. 'சிறும்பு' என்பது கொச்சை வழக்கு.

பல் தொடர்பால் பல்லி பெயர் பெற்றது போலவே பன்றி என்பதும் பல் தொடர்பால் பெயர் பெற்றதேயாம். பல்+தி= பன்றி. கடைவாய் ஓரங்களில் நெடும் பல் அல்லது கோரைப் பல் இருந்த காலத்தில் அதற்குச் சூட்டப்பெற்ற பெயர் பன்றி. கோரையின் குருத்து நீளல் இயற்கையை நோக்கிக் காண்பார் 'கோரைப் பல்' என்னும் பெயரிட்டு விளக்கமும் காண்பார். யானையின் நெடும் பல்லாம் கொம்பு தேயாமல் நிலைத்தது. பன்றிக்கோ தேய்ந்தொழிந்தது. கோரைப் பல், மாந்தர்க்கும் முந்தையுடைமையாக இருந்தைப் பழஞ் சிற்பங்கள் பறையறையவில்லையா! பன்றிக்கு 'வல்லுளி' என்னும் பெயர் உண்மையையும், யானையைக் குறிக்கும் 'கோட்டுமா' என்னும் பெயர் பன்றியையும் குறித்தலையும் அறியின், பெயரின் பொருள் விளக்கமாம்.

பல் என்பது பத்தின் மூலமாம், பல்+து=பஃது; பத்து ஆயிற்று. 'பல்' 'பன்' என ஆகியும் பத்தைக் குறிக்கும். 'இருகை விரல்களையும்' எண்ணத் தெரிந்துகொண்ட காலத்தில் அதுவே பலவற்றுள் உச்ச எண்ணாகக் கருதி வைக்கப்பெற்ற பெயராம். 'பஃது' 'பத்து' என்னும் இருவகை ஆட்சிகளும் பண்டை நூல்களிலே இடம் பெற்றிருத்தலும் 'பன்னிரண்டு' என்பதிலே 'பன்' என்னும் வடிவே பத்தினைக் குறித்து நிற்றலும் எண்ணுக. இனிப் 'பன்னொருவர்' எனப் பரிபாடல் கூறுவதும் (8) 'பன்னொன்று' என அருகலாக வழக்கில் உள்ளதும் இணைத்துக் காணலாம்.

இனிப் பஃது பத்து ஆகுமோ? என்பார் உளரெனின், 'அஃகுள்' 'அக்குள்'; 'அஃகம் அக்கம்' என வருவனவற்றைக் கருதுவாராக.

பெருநீர்ப் பெருக்குடைய குமரிக் கண்டத்தோர் ஆறு 'பஃறுளி' என வழங்கப்பெற்றது அறிஞர் அறிந்தது. 'பல துளி' என்பதே

'ப∴றுளி' என்பதும், 'பல துளி பெருவெள்ளம்' என்பதும் எவரே அறியார்?

பல துளி ப∴றுளியானது போலவே பல தாழிசை ப∴ருழிசை யாகவும், சில தாழிசை சி∴ருழிசையாகவும் கொச்சகக் கலிப்பா வகையில் இடம் பெற்றமை யாப்பியல் வல்லார் கோப்புற அறிந்தவை யாம்.

ப∴றி என்பது படகைக் குறிக்கும் சொல். ஆனல் ஒரு படகைக் குறிக்காமல் பல படகுகளைக் குறிக்கும் தொகுதிச் சொல் என்பது ப∴றி என்பதன் வேர் புலப்படுத்துகின்றது. பல்+தி= ப∴றி.

பல படகுகளைக் குறிப்பது 'ப∴றி' என்பதற்குச் சான்று உண்டோ எனின், 'உண்டு' என்பதாம். கழக இலக்கியங்களில் பட்டினப் பாலையில் மட்டும் ஒரோ ஓர் இடத்தில் (30) ஆளப் பட்டுள்ள சொல் ப∴றி. அது,

''கொழும்பல்குடிச் செழும்பாக்கத்துக்
குறும்பல்லூர் நெடுஞ் சோணுட்டு
வெள்ளை யுப்பின் கொள்ளை சாற்றி
நெல்லொடு வந்த வல்வாய்ப் ப∴றி
பணைநிலைப் புரவியின் அணைமுதற் பிணிக்கும்''

என்பது. ''பந்தியிலே நிற்றலையுடைய குதிரைகளைப் பிணிக்குமாறு போலே சார்ந்த தறிகளிலே பிணிக்கும்'' என்கிருர் நச்சினுர்க் கினியர். வணிகப் படகுகள் பலவாகச் செல்லுதலும் மீண்டு வருதலும் வழக்கம் என்பதை வரலாற்று வழி அறிந்தோர் 'ப∴றி' யின் மெய்ப் பொருள் தெளிவர். அக்காலச் 'சாத்துகள்' வணிகர் கூண்டு வண்டிகள்—வரிசையாகச் சென்று வணிகம் செய்து திரும்பிய செய்தியும் ஒப்பிட்டுக் காணத் தக்கதே.

தோல் என்பது 'கிடுகு படை' அல்லது 'பரிசை' எனப்படும். 'கேடயம்' என்பது அது. பல வீரர்களும் ஒருங்கே தோல் பிடித்துப் போர்க்களத்து நிற்றலைப் 'ப∴ றேல்' என்பர். அதனை மழை முகிலுக்கு ஒப்பிட்டுக் காட்டுதல் பெருவழக்கு.

''மழை மருள் ப∴றோல்'' —மலைபடு. 377
''ப∴றோல் போலச் சென்மழை'' —நற். 197
''மழையென மருளும் ப∴றோல்'' —புறம். 17

என்பவற்றைக் காண்க.

பல்லடியாக் கிளைத்த சொற்கள் இவைதாமோ? இன்னும் பலவாகலாம். அறிஞர்கள் எண்ணுவார்களாக.

---

# சங்க நூல்களில் ஞெமை

[பி. எல். சாமி, இ. ஆ. ப. (ஓய்வு)]

''வருவர் வாழி தோழி யரச
யானை கொண்ட துகிற்கொடி போல
அலந்தலை ஞெமயத்து வலந்த சிலம்பி
யோடைக் குன்றத்துக் கோடையொடு துயல்வர''
—அகம். 111

''வெயிற்கவி னிழந்த வைப்பிற் பையுள் கொள
நுண்ணுதி னிவக்கும் வெண்ஞெமை வியன் காட்
டாளி லத்தத் தளிய ளவனொடு''
—அகம். 145

''புலம்புறுங் கொல்லோ தோழி சேணோங்
கலந்தலை ஞெமையத் தாளி லாங்கட்
கல்சேர் பிருந்த சில்குடிப் பாக்கத்து''
—அகம். 187

''இன்னிலை யறியா யாயினுஞ் செந்நிலை
யமையா டங்கழை திண்டிக் கல்லென
ஞெமையிலை யுதிர்த்த வெரிவாய்க் கோடை
நெடுவெண் களரி நீறுமுகந்து சுழலக்
கடுவெயி றிருகிய வேனில் வெங்காட்டு''
—அகம். 353

''புன்புறப் பெடையொடு பயிரி யின்புற
விமைக்க ணேதா கின்றே ஞெமைத்தலை
யூனசை இ யொருபருந் திருக்கும்
வானுயிர் பிறங்கன் மலையிறந் தோரே''
—குறுந்தொகை 285

''அறியேன் வாழி தோழி அறியேன்
ஞெமையோங் குயர்வரை இமயத் துச்சி
வாஅன் இழிதரும் வயங்குவெள் அருவிக்
கங்கையம் பேரியாற்றுக் கரையிறந் திழிதரும்
—நற்றிணை. 369

''மரந்தலை மணந்த நனந்தலைக் கானத்து
அலந்தலை ஞெமையத் திருந்த குடிஞை
பொன்செய் கொல்லனின் இனிய தெளிர்ப்ப
—நற்றிணை. 394

''அகரு வழைஞெமை யார மினத்'' —பரிபாடல் 12-5

சங்க நூல்களில் ஞெமை என்ற மரப்பெயர் வழங்கியுள்ளது. தொல்காப்பியத்தில் எழுத்ததிகாரத்தில் வல்லெழுத்து விலக்கி மெல்லெழுத்து மிகுத்தலைப்பற்றி வரும் சூத்திரத்தில் ஞெமை மரமும் அதே மரமான நமையும் கூறப்பட்டுள்ளது.

''விசைமரக் கிளவியும் ஞெமையும் நமையும்
அவைமுப் பெயரும் சேமர இயல''

என்று எழுத்ததிகார சூத்திரம் 282 கூறியுள்ளது. அதன்படி ஞெமைங்கோடு, நமைங்கோடு என்று மெல்லெழுத்து கசதப முதலிய மொழிமேல் தோன்றும் என்று உணர்க என்று கூறப்பட்டுள்ளது, தொல்காப்பிய சூத்திரத்தின்படி ஞெமை நமையென்றும் அழைக்கப் பட்டது தெரிகின்றது, இந்த மரம் மிகவும் உறுதியானது,

ஞெமை என்ற மரத்தைக் கண்டுபிடிப்பது எளிதாகும். தொல் காப்பிய சூத்திரமே நமை என்று கூறியுள்ளது. இன்றும் இம் மரம் நமை என்றும், வெள்ளை நாகை என்று தமிழிலும் வெள்ளை நாவா என்று மலையாளத்திலும் கூறப்பட்டுள்ளது. கோயமுத்தூர் மாவட் டத்தில் வெக்காலி என்றும் நமை என்றும் அழைக்கப்படுகின்றது. நமைச்சல் போல் மரப்பட்டை உரிந்திருப்பதால் நமை என்று பெயர் பெற்றிருக்கலாம். இதனுடைய அடிமரம் உறுதியானது. அதனுல் ஆங்கிலத்தில் Axle wood என்று அழைக்கப்பட்டுள்ளது அறிவி யலில் இந்த மரம் Anogesius latifolia என்று அழைக்கப்பட் டுள்ளது

——

## இச் சிக்கல் தீர்வ தெந்நாள் ?

[நாகை. வேலன்]

இலங்கைத் தமிழருக்கு இன்னல் விளையுதென்று
இங்கிருந்து எழுகின்ற எச்சரிக்கைக் களவில்லை
இந்நிலையில் அந்நாட்டில் எதிரிகளின் துப்பாக்கி
எறிகின்ற குண்டுகட்கு இரையாகும் நந்தமிழர்
எண்ணிக்கை தனைக்காணில் இன்னுஞ் சிலநாளில்
இருந்ததுண்டோ தமிழினந்தான் எனும்நிலையே தோன்றிவிடும்
இந்நாட்டுத் தேசியமும் பன்னாட்டு அரசியலும்
பலத்தேர்வு காண்பதற்குப் பண்புடைய தமிழினந்தான்
பகடைக்காய் ஆவதன்றிப் பயனேதும் விளைந்திடுமோ ?
இந்நிலையைப் பார்த்திருந்தும் *இவ்வுலகின் பெருமன்றம்
என்னதான் செய்குதென்று இடித்துரைப்பார் யாருமில்லை
இடிப்பாரே இல்லாயின் இச்சிக்கல் தீர்வதெந்நாள் ?
என்றாலும் ஈழத்தின் விடுதலைப்போர் ஓயாது
ஈழத்தின் விடுதலையை இழிவாகக் கருதுகின்ற
எவ்வரசும் வாழாது என்றுரைத்தால் குற்றமுண்டோ ?

* ஐ. நா. சபை.

# *எண்மர் எண்மணி மாலை

## [மருத்துவர் மறையரசன்]

(சிலம்பு-ரு அ. ச அ அ ஆம் பக்கத் தொடர்ச்சி)

### 3.1. வீரமாமுனிவர் :

(வெண்பா)

காசு திகிலியோன் கண்டெடுத்த நன்முத்தே
மாசு வராத்தமிழில் மாண்போடு—வீசுபுகழ்
கொண்டு பலநூல்கள் கோத்து நிறைத்தோயுன்
தொண்டு நிலைக்குந் தொடர்ந்து.

### 3.2. பரிதிமாற் கலைஞர் :

(அகவல்)

தொடர்ந்து நாடக இயலையுங் காட்டினை
அடர்ந்து வரும்புகழ் அனைத்தும் மீட்டனை
கடந்த தனித்தமிழ்க் கண்டதை மீட்டினை
உடந்தை யாப்பிற உணர்வுகள் கூட்டினை

இலக்கண நூலாய் எழுதினை ; தமிழ்த்தன்
கலக்கம் நீங்கிடுங் கருத்தினை ; விளைந்த
மதிவா ணனெனும் புதினம் அவிழ்த்துவான்
மதியாய்த் தமிழுள இருட்டைக் களைந்து

செப்பஞ் செய்தனை சிறப்புடைய உனையே
ஒப்ப முடியுமோ ? உண்மைத் தமிழன்,
நீயே தானென நினைந்துளம் உருகவே
மாயோ னென்னும்படி மாத்தமிழ்ச் சுனையே
எதிர்ப்போர் நீருள் எழும்பா தமிழ
மதிப்போர் பெருகுநாள் வந்திடல் அருகே !

### 3.3. மறைமலையடிகள் :

(கட்டளைக் கலித்துறை)

அருக வடமொழி ஆட்சிமை என்றுள ஆழ்பிறப்பும்,
பெருக தமிழெனக் கூரறி வோடுசெய் பேரகழ்வும்,

---

* இம் மூன்றும் பகுதி முன் இதழில் இடம்பெற வேண்டியது. தவறாக வேறொரு பகுதி இடம் பெற்றுவிட்டதால் இப்போது இடம் பெறுகிறது.

முருக வழிபாடும், மெய்மைச் சிவனியம் மூழ்கியுள
முருகச் செயும்பணி மேலும் சிறக்குமே மென்மலையே !

**3.4.** பாவேந்தர் :

(வஞ்சி விருத்தம்)

மலையாயெதிர் உள்முடமே மறையாதெனும் போதும்
கொலைவாளினை எடடாவெனக் குரல்தந்தனை போதும் :
தலைவாத்தமிழ்ப் பகையாவையும் தடுமாறியே ஓயும்
நிலையேதரும் புரட்சிக்கொரு நிறைபாவலன் நீயே.

**3.5.** பாவாணர் :

(எண்சீர் விருத்தம்)

நீயுமொரு மகவெம்போல் நில்லாய் உள்ளம்
        நினைந்துருகி நினைந்துருகி நாளும் நாளும்
தாயுமொரு கலிப்புமொழி அழுக்காய்ப் போகத்
        தடுக்குமொரு நல்லெண்ணங் கொண்டே வுன்றன்
தூயவொரு தமிழாய்வால் தேவ நேய,
        துணிந்தவொரு தூசுமின்றித் தட்டி வைத்தீர்
நாயுமொரு கருத்துசொலும் ; தமிழ ரெல்லாம்
        நன்றியொடு தனித்தமிழை வளர்க்கின் றரோ ?

**3.6.** வ. சுப்பையா (பிள்ளை) :

(மருட்பா)

தமிழை வளர்க்கின்ற தென்புலவர் பேணி
அமிழ்தின் களிப்படைப்பைக் காய்ந்தே—உமிழாது
தங்கமாய்த் தாங்குந் தாமரைச் செல்வவுன்
பொங்கும் புகழும், பதிப்பாய்
எங்கும் சிறந்து எதிலும் நிலைக்கும் !

**3.7.** பண்ணுய்வாளர் :

(சிந்து)

நிலைக்கு மெனவே நிறைவாய் இசையை
        நின்றே ஆய்ந்து நிமிர்ந்தே வாழ்ந்து
களைத்தி டாத காளை உள்ளார்
        கவலைப் படாதே—எந்தக்

கடுமையான தொல்லை வரினும்
கருத்தை விடாதே.

தொண்டு தோய்ந்த தூய உள்ளம்
துறவி போலும் வழியும் வாழ்வும்
கொண்டு சுந்த ரேசன் வந்தார்
குழைந்து விடாதே—மகிழ்வைக்
கூட்டும் இசையில் செம்மை சேரும்
குறைந்து விடாதே.

குரலும், துத்தம், விளரி, தாரம்,
கொள்கைக் கிளையும், உழையும், இளியும்,
வரவும் போம்ச ரிகம பதநி
வருத்தப் படாதே—நம்மை
வளைக்கும் வேற்று நாட்டி னிசையும் ;
வளையக் கூடாதே !

3.8. பாவல ரேறு :

(கலி வெண்பா)

கூடாமல் வெவ்வேருய்க் கூறுபட்ட ஏ தமிழா !
ஊடாக உள்ளதடை நீக்கிவிடு—தேடாமல்

வந்துன்னைச் சேர்ந்திடுமோ தென்நாட்டின் ஆளுகையும்
கந்தையினைக் கட்டிவரக் கால்பிடித்து—நொந்து நொந்து

நானடிமை என்றுவாழல் வாழ்வோடா ?—மேற்கொம்புத்
தேனடியில் நிற்கும் முடமோடா ?—வீணடித்த

வாழ்வெல்லாம் போதுமடா வாழ்வோமே ஒற்றுமையாய்
தாழ்வும் தலைக்குனிவும் தாமாட—ஆழ்மனத்துத்

தோன்றும் பகையுணர்வைத் தூக்கியெறி—உன்னினத்தின்
ஊன்றும் உணர்வுமட்டும் மேலோங்கின் சான்ருக

நம்மொழி நம்மினத்தை நாமாளும் நாள்வருமே !
எம்மொழி ஏற்றம் உலகறியும்—தெம்மாங்குப்

பாடிக் களித்திடலாம் பைந்தமிழின் ஆட்சியிலே
ஆடிக் களித்திடலாம் என்றெல்லாம்—பாடி

அமிழாது காக்குமெழில் தென்மொழியா சான்பின்
தமிழாசேர் உன்னினத்தோ டொத்து.

———

# அகராதித் தொகுப்பு நெறிகள்

[முனைவர் வி. ப. கா. சுந்தரம், மதுரை.]

இன்று தஞ்சைப் பல்கலைக்கழகம் பேரகராதியும் கலைக் களஞ்சியமும் தொகுக்கும் பணியில் ஈடுபட்டுள்ளது; அகராதித் தொகுப்பு ஒரு கூட்டுப் பணி; அறிஞர் பலர் கூடி அமைத்தற்குரியது. முதலில் நெறிமுறைகளை அமைத்துக்கொள்ளுதல் வேண்டும். அகராதி தொகுப்பிலே தஞ்சை கைக்கொண்டுள்ள நெறிகளையும் முறைகளையும் அறிஞர் பலருக்கு அச்சிட்டு அறிவித்தல் பயனும் பண்புமாகும்.

அகராதிக் கலை, படிப்படியாய்ப் பல நூற்ருண்டுகளில் பல்வேறு நாடுகளிலும் முன்னேறி வந்துள்ளது.

(1) நிகண்டுகளில் சொற்கள் ஆழமான பொருள் வேறுபாடு தெரியாமல் தொகுக்கப்பட்டுள்ளன. எ - டு: தாளம் போடுதல் என்ற சொல்லுடன் ஒத்தறுத்தல் என்பதும் கூடச் சொல்லப்பட்டிருக்கும்; ஒத்தறுத்தல் வேறு; தாளம் போடுதல் வேறு; இவை இரண்டையும் நிகண்டு ஒன்ருய்க் கூறும். மேலும் நிகண்டுகளில்—தமிழ்ச் சொல்லொடு பிறமொழிச் சொற்களும் சேர்த்துத் தொகுக்கப்பட்டிருக்கும். நிகண்டு செய்துள்ள பெரும் பிழைகளையும் அகராதிகள் செக்குமாட்டு முறைப்படி வழிவழியாய்க் கூறிக் கொண்டே வருகின்றன.

இப் பிழைகள் பல வீரமாமுனிவர் சதுரகராதியிலும் உண்டு.

இனி, வெ∴ப்ரீசியசு வெளியிட்டுள்ள அகராதியில் வடமொழிச் சொற்களை உடுக்குறியிட்டுக் காட்டியுள்ளார்.

இம் முறையைச் சென்னைப் பல்கலைக்கழக அகராதியும் பின்பற்றியுள்ளது.

இனி, இதனிலும் முன்னேறிய அமைப்புடையது பர்ரோ, எமனே தொகுத்துள்ள திராவிட மொழிகளின் வேர்ச் சொல்லகராதி, (Dravidian Etymological Dictionary) இதிலே தனித் தமிழ்ச் சொற்கள் மட்டுமே இடம் பெற்றுள்ளன. மேலும் சொற்கள் வரிசை எண்களால் குறிக்கப்பட்டுள்ளன. ஆனல் இது வேர்ச் சொல்லின் வழியாகப் பொருள் பிறப்பதை விளக்கவில்லை. இந்த அகராதி பல முன்னேறிய அமைப்புகளை உடையது.

இன்று தொகுக்கப்படும் அகராதியில், Thick, Motor, Bus, Conductor போன்ற ஆங்கிலச் சொற்களை மக்கள் மிகவும் வழங்குவதால் இவற்றையும் அப்படியே சேர்த்துத் தொகுக்க ஆசைப்பட்டுக் கொண்டிருக்கிறார்கள் என்று முத்தமிழ்க் காவலர் கி. ஆ. பெ. விசுவநாதம் அவர்கள் புலவர் குழுவில் கூறி எல்லையில்லாத கவலையையும் வருத்தத்தையும் தெரிவித்தார்.

ஆங்கிலச் சொல் கலப்புக்கு ஓர் எ - டு:- காய்கறி விற்கும் ஒரு கிழவியின் பேச்சிலே எத்தனையோ ஆங்கிலச் சொற்கள் உண்டு. எ - டு: "ஐயா! நான் மில்லுக்குப் பக்கத்திலே குடியிருக்கேன்; காலையிலே 6 மணி பெல் அடித்தவுடன் எழுந்திரிப்பே. சிட்டி பஃசு இசுடாப்பிலே வந்து, இசுபிடா ஏறி, டிரைவர் பக்கம் முன் சீட்டிலே உக்காருவேன். கண்டக்டர் கிட்ட டிக்கெட்டு வாங்கிக்கிட்டு, மதுரை சென்டரல் பஃசு இசுடாப்பிலே இறங்குவேன். அப்போது டிக்கட் இன்சுபெக்டர் வரமாட்டாரு. நான் எறங்கி பிளாட்பாரம் வழியே போவேன். போலீசு பீட்டு இருக்காது. சாப்பு கடையெல்லாம் மூடியிருக்கும். மார்க்கட்டுக் குள்ளே போய் ஒரு ரவுண்ட் அடிப்பேன், சீப்பா விக்கிற காய்கறிகளை செலெக்டு பண்ணி வாங்குவேன். கரக்ட்டா நிறுத்து வாங்குவேன். மார்க்கட்டிலே ரஷ் இருக்காது. சாலியாய் ரோட்டுக்குப்போய் ஒரு டீ சாப்பிடுவேன். அப்போ கமிசன் கடைக்காரன் வருவான். அவனுக்கு கொஞ்சம் சேன்ஜு கொடுப்பேன். டீச்சர்ஸ் லயனிலும் மில் காலனி லயனிலும் எல்லாம் வித்துப் போடுவேன். காபேஜு, பீன்சு, காரெட்டு நல்லா விக்கும்.

இவ்வாறு ஏறத்தாழ முப்பது தடவை ஆங்கிலச் சொற்களைக் கிழவி இயல்பாக வழங்குகிறாள், அவளோ உட்கிடை சிற்றூரராள். தமிழே தெரியாத கிழவி.

இனி நாகரிகர் வீட்டிலும் சில இனத்தவர் வீட்டிலும் பேசும் ஆங்கிலச் சொல் கலப்புக்கு அளவே இல்லை. இவற்றை எல்லாம் அகராதியில் சேர்த்தால் "ஃகல்லோ மை டியர் செமீன்தார்! கௌடு யு டு!" என்ற திரைப்படப் பாட்டுப்போல, பைந்தமிழ் மொழி ஆகிவிடும்.

இந்த ஆங்கிலச் சொற்கள் ஆங்கில ஆட்சிக் காலத்திலே— புகுந்தவை—ஆங்கிலம் கலந்து பேசுவது நாகரிகமும் உயர்வுமாகும் என்று மூடத்தனமாக ஆணவமாக எண்ணியதனால் புகுந்தவை. முகமதியர் ஆட்சியிலே உருதுச் சொற்கள் புகுந்தன. அடிமை இந்தியாவிலே ஆங்கிலம் கலந்து பேசிய அடிமைப் புத்தி, விடுதலை இந்தியாவில் விலகிவிடவில்லை.

இனி ஆங்கில அகராதியில் லத்தீன், கிரேக்கம் கலந்துள்ளது போல தமிழில் ஆங்கிலச் சொல்லைக் கலக்கலாம் என்று வழக்காடு வது பொருந்தாது. கிரேக்கம், லத்தீன் நீக்கிவிட்டால் ஆங்கில மொழி இயங்காது. தவிர அவை இன மொழிகளும் ஆகும்.

மேலும் ஆங்கில அகராதி செய்துள்ள பிழைகளை எல்லாம் தமிழ் அகராதி செய்தல் வேண்டும் என்று அடம்பிடிப்பதும் கூடாது.

இனி அகராதியிலே கொச்சை வடிவச் சொல்லை அப்படியே எடுத்துக்கொள்ளக் கூடாது. எடுத்துக்காட்டாக ''அரணுக் கயிறு'' என்பதை ''அரை ஞாண்'' என்று செப்பமாக்கியே சேர்த்தல் தகுதியுடைமையாகும். ஆயிரம் ஆயிரம் மாணவர்கள்—சொல்லு கிறார்கள் ''பையன் கம்பி நீட்டி விட்டான்'' என்று. இந்தத் தொடர் பொருளொடு பொருந்தாப் புன்மைத் தொடர். இஃது அகராதியில் இடம் பெறுதல் கூடாது; பையன் சொல்லுகிறான்—''வண்டியடிக் கிறான்'' என்று. அஃது அகராதியில் இடம் பெறுதல் கூடாது.

அகராதிக் கலை இன்று மிகச் சீரிய செவ்விய நெறிகளில் வளர்ந்துள்ளது; புதுப்புது முறைகள் தோன்றியுள்ளன; அவற்றுள் சிறந்தவற்றை ஆய்ந்து எடுத்து அகராதித் தொகுப்பிலே பயன் படுத்தல் வேண்டும்.

''கருப்பு ஆங்கிலம்'' என்பது போல கருப்பு அகராதி தோற்று வித்தாலும்—தமிழை அழித்துவிட முடியாது. நூற்றாண்டு தோறும் கி. ஆ. பெ. விசுவநாதங்கள், தேவநேயர்கள், மறைமலைகள், சு. ப. மாணிக்கங்கள், வ. சுப்பையா பிள்ளைகள், பூ. மனோகரர்கள், கி. இராமலிங்கனார்கள் தோன்றித் தமிழைக் காப்பார்கள்; உயிரீந்து பேணுவார்கள்.

ஆங்கிலச் சொல்லைச் சில துறையில் அப்படியே வைத்துக் கொள்ள வேண்டும் என்பார்கள்.

'ஆங்கிலச் சொல்லுதான் விளங்கும்' என்றும், பெரும் வழக் கிற்கு வந்து விட்டது என்றும் வழக்காடும் மூளைகட்கு ஒன்று சொல்ல விரும்புகிறேன். ''கல்லூரி'' என்பது இன்று மக்களுக்கு விளங்கவில்லையா? ஊர் தோறும்

— | ''உந்து நிலையம்'' | —

உதய சூரியன் போல் நிற்க வில்லையா? ''கார் இசுடாண்டு'' எங்கே போயிற்று?

அறிவியல் கலைச் சொல்லாக்கம் பற்றி :—

தமிழறிவு பெருத அறிவியல் வல்லுநர், என்ன சொல்லு வார் ?— ''ஆங்கிலச் சொல்லை அப்படியே வைத்துக் கொள்வோம்'' என்று தான் அவர் மூளை சொல்லும். அறிவியல் கற்றுத் தேருத தமிழறிஞர் ''அப்படியேதான்'' சொல்லுவார். ஏனென்ருல் துலைக் கோல் தட்டுகளில் ஒரு தட்டிலே ஒன்றுமில்லை.

நாராயணனை நராயணன் என்று கம்பன் ஓராமல் ஒரு பாடலில் சொல்லிவிட்டான் என்ருல், அந்த ஒரு பாடலில் பொருந் தாது திருந்தாது சொன்ன சொல் வடிவம்—அகராதியில் இடம் பெறத் தேவையில்லை.

மேலும் 'அரும்பாலை = இது ஒரு இராகம்' இப்படி வறட்டுக் குறிப்புகள் கூருமல், கற்ருர் பால் கேட்டு—உரிய விளக்கம் எழுதும் மனம் அதிகாரத் தலைவர்களிடம் மலருமாறு இறைவன்தான் அருள் புரிய வேண்டும்.

''ஆங்கிலம் கலவாது பேசுவதே சிறப்பு'' என்று அண்ணுத் துரை அவர்கள் காட்டிய அறிவு நெறியைக் கடைப் பிடிப்போம்.



## என்ன கைம்மாறு செய்யமுடியும் ?

பயனற்ற வார்த்தைகளை வளவளவென்று பேசாமல் சுருக்கமாய் உரைக்கும் குணம் வேண்டும் என்று அதற்காக ஒரு தனி அதிகாரம் காண்கின்ருர் திருவள்ளுவர்.

அதற்கு அவர் கூறும் காரணம், பயனில்லாத சொற்கள் பலருக்கு வெறுப்பைத் தரும் என்பது ஒன்று; தேவையற்றவை என்பது மற்ருென்று; நன்மை தரமாட்டா என்பது இன்னுென்று; ஒழுங்கையும் தலைமையையும் கெடுக்கும் என்பது பிறிதொன்று; பொருளற்ற சொற்கள் உள்ளத்தில் மருளையும் மாசையும் சேர்க் கும் என்பது வேருென்று. இப்படிப் பல காரணங்களை நுட்ப மாகக் கண்டு திருவள்ளுவர் தெரிவிப்பதற்கு உலகம் என்ன கைம்மாறு அவர்க்குச் செய்யமுடியும் ?

தவத்திரு அழகரடிகள்

'திருக்குறள் அறம், பக். ௧௬௬.

# கம்பர் காட்டும் கற்பனைச் சுவர்க்கம்

[திரு. ந. ரா. முருகவேள், எம். ஏ., எம். ஓ. எல்.]

முன்னுரை:

கவிஞனின் உள்ளம், கற்பனை உள்ளம். கற்பனை உலகில் கவிஞன் தன்னை மறந்து உலவி, இன்பங் காண முயல்கின்றான். இவ்வுலகில் காண முடியாததையும், பெற இயலாததையும், நுகரக் கிடைக்காததையும், கவிஞன் தன் உள்ளத்தில் தானே படைத்துக் கொள்கின்ற கற்பனை உலகில் காண்பதாகவும், பெறுவதாகவும், நுகர்வதாகவும் கனவு காண்கின்றான்'

வல்லதம் விழியின் வீச்சால்,
    மண்ணொடு விண்ணும் எல்லாம்
ஒல்லையின் அளந்து தேர்ந்து,
    கற்பனை உணர்வின் மாண்பால்,
இல்லதொன் றனையும் ஊர்பேர்
    இயைபுறப் படைத்துக் காட்டும்
நல்லியற் கவிஞர், செய்கை
    நலமெலாம், நவிலற் பாற்றோ?*

—தமிழாக்கம்: ந. ரா. மு.

மேலை நாட்டில், சர். தாமஸ் மூர் (Thomas Moore) என்பவர், உட்டோபியா (Utopia) என்னும் பெயரில், தாம் விரும்பும் ஒரு வகைக் கற்பனை உலகினை விவரித்து நூல் எழுதியுள்ளார். அவ்வாறே சாமுவேல் பட்லர் (Samuel Butler) என்னும் மற்றோர் ஆசிரியர், எரிவோன் (Erehwon) என்னும் தலைப்பில், இவ்வுலகிற் காணப்பெறும் குறைபாடுகள் எதுவுமே இல்லாமல், குறைவிலா நிறைவாய்த் துன்பமற்ற இன்பமயமான உலகம் ஒன்றைத் தம் கற்பனையில் உருவாக்கி, அதுபற்றி ஒரு சுவையான நூலை வரைந்துள்ளார். உண்மையில் அத்தகைய ஓர் உலகம் இருத்தல் இயலாது

---

* The poet's eye, in a fine frenzy rolling,
"Doth glance from heaven to earth, from earth to heaven,
And as imagination bodies forth
The form of things unknown, the poet's pen
Turns them to shapes, and gives to airy nothing
A local habitations and a name"
—William Shakespeare, A Midsummer—Night's Dream.

ஆதலின், அக் குறிப்பும் வெளிப்பட 'எங்கும் இல்லை' என்னும் பொருளை உடைய (Nowhere) என்னும் சொல்லையே, அவர் எரிவோன் (Erehwon) எனக் கரந்துறை மொழி (Anagram) ஆக மாற்றியமைத்தார் என்பர். ''துணிச்சலான, புதிய உலகம்'' (The Brave New World) என்று ஆல்டசு அக்சுலி (Aldous Huxley) என்பவர் எழுதிய நூலும், இத்தகையது.

கம்பர்:

இவர்களைப் போலவே, கல்வி நலனிலும் கற்பனைத் திறனிலும் சிறந்த கவிவேந்தராகிய நம் கம்பரும், தம்முடைய கற்பனையில் ஒரு சுவர்க்கத்தினைப் படைத்துக் காட்டுகிறார். சுவர்க்கம், நரகம் என்னும் சொற்களினை, நாம் பலகால் கேட்டு அறிந்துள்ளோம். துன்பத்திற்கு இடமாக இருப்பது நரகம் என்றும், இன்பத்திற்கு இடமாக இருப்பது சுவர்க்கம் என்றும், நாம் பொதுவாகக் கருதுவது வழக்கம். ஆனால், சுவர்க்கம் என்றால், பின்வரும் இயல்புகளெல்லாம் பொருந்தியிருத்தல் வேண்டும் எனக் கம்பர் தம் கற்பனையிற் கருதுகின்றார்.

சுவர்க்கம்:

(1) சுவர்க்கம் என்பது, இன்ப நுகர்ச்சிக்கேயுரிய இடம்; அங்குத் துன்பத்தின் சாயல் சிறிது கூட இருத்தல் கூடாது.

(2) நாம் இன்ப உணர்ச்சியிலும் நுகர்ச்சியிலுமே திளைக்க வேண்டுமாயின், நாம் விரும்பும் பொருள்கள் எல்லாம், விரும்பியவாறே, உடனுக்குடன் விரைவாகவும், எளிதாகவும், குறைவின்றியும் கிடைத்தல் வேண்டும்.

(3) பொதுவாக இவ்வுலகில் நாம் விரும்பும் பொருள்கள் எளிதாகவும் விரைவாகவும் குறைவின்றியும் கிடைத்துவிட்டால், அப் பொருள்களின்மீது நம் விருப்பம் குறைந்து, வெறுப்பு ஏற்பட்டு விடுதல் இயல்பு. அங்ஙனம் சிறிதும் வெறுப்பு ஏற்படாத நிலையில், சுவர்க்கம் இருத்தல் வேண்டும்.

(4) எப்போதுமே நாம் ஒரு பொருளை அடையும் வரையில்தான், அதன்மீது நமக்கு அளவற்ற அன்பும் ஆர்வமும் காதலும் இருக்கும்; அடைந்த பிறகோ அப் பொருள்மீது நாம் கொண்டிருந்த அன்பும் ஆர்வமும் காதலும் தாமே தணிந்துவிடும். பின்னர் அப் பொருளின் மீது விருப்பம் எழாமையோடு, அதனை அனுபவிக்கும் ஆற்றலும் குறைந்துபோகும். இஃது இவ்வுலகத்தில் நாம் நாளும் கண்டுணர்ந்து வரும் இயற்கைத் தன்மை. சுவர்க்கத்தில் அங்ஙனம் இருத்தல்

கூடாது. பொருள்களின்மேல் விருப்பம் மேன்மேல் வளர்ந்து ஓங்குவதுடன், அவற்றை அனுபவிக்கும் ஆற்றலும் மேன்மேற் பெருகுதல் வேண்டும்.

(5) நாம் விரும்பி நுகரும் பொருள்கள், பிறர்க்கும் கிடைத்து, அவற்றைப் பிறரும் அனுபவிக்க முற்படின், அப்பொருள்களின் தனிச் சிறப்புக் குன்றிவிடும். மேலும் அப் பொருள்களினுல் நாம் எய்தும் இன்பமும் பயனும் குறைதல் திண்ணம். ஆதலின் சுவர்க்கத்தில் நாம் விரும்பி நுகரும் பொருள்கள், நமக்கு மட்டுமே கிடைத்தல் வேண்டும். வேறு பிறர் எவர்க்கும் அவை கிடைத்தலாகா. அவற்றினுடைய முழு உரிமையையும், முழு இன்பத்தினையும், நாமே நுகருதல் வேண்டும். சுவர்க்கத்தில் நமக்குக் கிடைக்கும் இன்பம், வேறு எங்கும் எதனுலும் எவர்க்கும் கிடைத்தல் கூடாது.

(6) இது மட்டுமே யன்றி, நாம் விரும்பி நுகரும் அந்தச் சிறந்த பொருள்கள், சிறிது காலம் இருந்து அழிவனவாகவோ, அல்லது பின்னர் கிடைக்காமற் போவனவாகவோ இருத்தல் கூடாது. அழிந்துபடுமோ என்றும், இனி ஒருகாற் கிடைக்காமற் போகுமோ என்றும், நாம் சிறிதும் கவலைகொள்ள வேண்டாதபடி, நாம் விரும்பும் பொருள்களும், அவற்ருல் நாம் நுகரும் எல்லையற்ற இன்பமும், என்றும் அழியாமல் நிலைபேறுடையனவாய், மேன்மேல் ஓங்கிச் சிறத்தல் வேண்டும்.

(7) இத்தகைய பலப்பல நலங்களும் சிறப்புற அமைந்திருப்பதே, உண்மையில் சிறந்த சுவர்க்கம் (Ideal Paradise) ஆகும்.

இலங்கை மாநகரம் :

இவ்வாறு, கவி வேந்தராகிய நம் கம்பர், ஒப்புயர்வற்ற ஒரு கற்பனைத் துறக்கத்தினைத் தம் கவிதை உள்ளத்தாற் கருதிப் படைத்துக் காட்டுகின்ருர்: கம்பராமாயணத்தில், சுந்தர காண்டத்தில், கடல் தாவு படலத்தில், அனுமான் இலங்கைத் தீவில், பவள மலையில் பாய்ந்து, அதன்மேல் நின்றுகொண்டு இலங்கையைக் காணுகின்ருன். இலங்கையின் பரப்பும் அமைப்பும் சிறப்பும் கண்டு பெரிதும் வியக்கின்ருன். தேவருலகம் இதற்கு ஒரு சிறிதும் ஈடாகாது; "பொன்நகர் இதனை ஒக்கும் என்பது புல்லிது அம்மா!" என்று எண்ணி மலைக்கின்ருன். விரும்பிய பொருள்களையெல்லாம் தடையின்றியும் குறைவின்றியும் விரைவில் எய்தி இன்புற்றுத் திளைக்கும் இடமே, துறக்கம் எனப்படும். தேவருலகம், இதுபோது இராவணனுல் தேவர்கள் துன்புறுதற்குரிய இடமாகிவிட்டது. ஆதலின் அது

துறக்கமன்று. எல்லா இன்பங்களும் எளிது இனிது துய்க்க வல்ல இவ்விலங்கை மாநகரமே, அத் தேவருலகத்தினும் பன்மடங்கு சிறப்பும் வளப்பமும் உடைய துறக்கம் ஆகும் என்று, துணிகின்ருன். இக் கற்பனைத் துறக்கம்பற்றிக் கம்பர் கவினுற விளக்குகின்ருர்.

"மாண்டதோர் நலத்திற் ருமென்று
உயர்த்துதல் வாய்மைத்து அன்ருல்;
வேண்டிய, வேண்டின் எய்தி,
வெறுப்பின்றி, விழைந்து துய்க்கும்,
ஈண்டரும் போக இன்பம்
ஈறிலது யாண்டுக் கண்டாம்;
ஆண்டுஅது துறக்கம்; அஃதே
அருமறைத் துணிபும் அம்மா!"

பாடற்பொருளும், முடிவுரையும்:

"இந்த இலங்கை மாநகரம், மிகச் சிறந்த ஒப்பற்ற அழகை உடையது என்று, கூறுதல் மட்டுமே உண்மையாகாது. விரும்பிய பொருள்களையெல்லாம் பெறுதல், எந்த இடத்தில் இயலுமோ, அந்த இடந்தான் சுவர்க்கம் என்று வேதங்களும் கூறுகின்றன. தேவருலகம், எல்லாவற்றையும் அளிக்கவல்ல இன்ப உலகம் என்று முன்பு இருந்தது. ஆனல், அஃது இப்போது தேவர்கள் திறத்தில் துன்ப உலகமாக மாறிவிட்டது. இராவணன் ஆள்கின்ற இவ் விலங்கை மாநகரமே, தற்போது எல்லா இன்பங்களையும் விரும்பிய படியெல்லாம் எய்துதற்கு இடமாக உள்ளது. அதனல் இவ்விலங்கை மாநகரமே, இதுபோது உண்மையான சிறந்த சுவர்க்கமாக விளங்கு கின்றது" என்பது இப் பாடலின் திரண்ட பொதுப் பொருள்.

(1) வேண்டிய, வேண்டின் எய்தல்
(2) வெறுப்பின்றித் துய்த்தல்
(3) விழைந்து துய்த்தல்
(4) ஈண்ட அரும்போக இன்பம் துய்த்தல்
(5) ஈறிலது ஆதல்

என்னும் பல்வகை உயரிய நலங்களை உடையது ஆதலைத் துறக்கத் திற்கு இலக்கணமாக வரையறை செய்தும், இத்தகையதொரு துறக்கஉலகம் எங்கும் காண்பரியதாதலின் "யாண்டுக் கண்டாம், ஆண்டு அது துறக்கம்" என்று முடிவு கூறியும், "அஃதே அருமறைத் துணிபும் அம்மா" என்று சான்றுகாட்டி அறிவுறுத்திக் கூறியும், அனுமானின் கூற்ருக அமைத்து, கம்பர் பாடியுள்ள கவிதை, மிக்க சிறப்பும் சுவையும் உடையதாகும்.

---

# கோனேரிராசபுரத்துக் குழப்பங்கள்

[டாக்டர் இரா. கலைக்கோவன், எம்.பி.பி.எசு., டி.ஓ.]

(முன் இதழ் ௯௨ ஆம் பக்கத் தொடர்ச்சி)

திரு. பரணீதரன் தம்முடைய திருத்தலப் பெருமை கட்டுரையில் இச்சிற்பத்தொகுதியைக் காட்டும் ஒளிப்படத்தின் கீழே 'செம்பியன் மாதேவியார் சிவபூஜை செய்யும் சிற்பம்' என்று குறிப்பிட்டுள்ளார்.[10]

தொல்பொருள் ஆய்வுத்துறையைச் சேர்ந்த திரு. வெ. வேதாசலம், இவரது (செம்பியன் மாதேவி) கற்சிலை கருவறைச் சுவரில் வடக்கு நோக்கி உள்ளது. கண்டராதித்தன் சிவலிங்கத்தோடு சேர்ந்து நிற்கிறார். அவரை மாதேவியார் மண்டியிட்டு, சாமரம், வெண்குடையைக் கையிலேந்திய பணிப்பெண்கள் பின் நிற்க வணங்குகின்றாராகச் சிற்பம் வடிக்கப்பட்டுள்ளது என்று எழுதுகிறார்.[11]

திரு. பட்டாபிராமன் அவர்கள் இக் கோயிலின் தெற்குச் சுவரில் செம்பியன் மாதேவி சிலை ஒன்று உள்ளதாகக் கட்டுரையொன்றில் குறிப்பிட்டிருப்பதாகவும், திரு. வேதாசலம் தம் கட்டுரையில் எழுதுகிறார்.[12] இதன்மூலம் தாம் குறிப்பிடும் சிற்பத் தொகுதி வடபுறச் சுவரில் இருப்பதாகச் சொல்லாமல் சொல்கிறாரோ என்று தோன்றுகிறது.

திரு. வேதாசலம் இத்துடன் நிற்காமல் செம்பியன் மாதேவி சிலையுள்ள கோயில்களைப் பட்டியல் போட்டுக் காட்டுகிறார்.[13] திரு. பட்டாபிராமனும் இவற்றைக் குறிப்பிட்டுள்ளதாகத் தம் கட்டுரையின் அடிக் குறிப்பொன்றில் விளக்கம் தருகிறார்.[14]

1. தஞ்சை மாவட்டம் சக்கராப்பள்ளி சக்கரவாகீசுவரர் கோயில்
   —செம்பியன் மாதேவி தன் பணிப்பெண்ணுடன் சிவலிங்கத்தை வணங்குவதுபோல் சுவரில் செதுக்கப்பட்டுள்ளது.

---

10. திருத்தலப்பெருமை அத்தியாயம் 147, ஆனந்தவிகடன் 29-1-84, பரணீதரன், பக். 67.

11. செம்பியன் மாதேவியார், கல்வெட்டு இதழ் 5, திரு. வெ. வேதாசலம், பக். 18.

12. Ibid. பக். 27.

13. Ibid. பக் 18.

14. Portraits of chola kings and queens—P. 2. Pattabiraman, Prof K. A. N. Sastri Felicitation vol P. 467-471; வேதாசலம் கட்டுரையில்—பக். 27.

2. நாகைக்கருகில் செம்பியன் மாதேவியில் உள்ள கயிலாச நாதர் கோயில்
—திருச்சுற்றில் வணங்கிய நிலையில் நின்றபடி செம்பியன் மாதேவி வடிவம்.

3. ஆனுங்கூர் அகத்தீசுவரர் கோயில் மகாமண்டபம்
—செம்பியன் மாதேவி சிலையும் கண்டராதித்தன் சிலையும் உள்ளன.

4. ஆடுதுறை ஆபத்சகாயேசுவரர் கோயில் தெற்குச் சுவர்
—செம்பியன் மாதேவி சிலை ஒன்று உள்ளது.

முதலில் கோனேரி ராசபுரம் கோயிலில் காணப்படும் சிற்பத் தொகுதிக்கு வருவோம். இத் தொகுதி கருவறையின் தென்புறச் சுவரில் காணப்படுகிறதே தவிர, திரு. வேதாசலம் நினைத்திருப்பது போல் வடபுறத்தில் அல்ல. இத் தொகுதியில் உள்ள நான்கு வடிவங்களில் மூன்று கிழக்கு நோக்கியும் ஒன்று மேற்கு நோக்கியும் உள்ளனவே தவிர, திரு. வேதாசலம் குறித்திருப்பதுபோல் வடக்கு நோக்கிய நிலையில் எந்த வடிவமும் அமையவில்லை. இக் கோயிலின் தெற்குச் சுவரிலும் ஒரு செம்பியன் மாதேவி சிலை இருப்பதாகச் சிலர் குறித்திருப்பது வியப்பைத் தருகிறது. இக் கோயிலில் எங்குமே செம்பியன் மாதேவியின் திருவடிவம் இல்லை என்பதுதான் உண்மை.

இந்தச் சிற்பத் தொகுதியில் காணப்படும் நான்கு வடிவங்களுமே ஆண் வடிவங்கள். முதல் வடிவம் சிவலிங்கத்தின் பக்கத்தில் நின்ற கோலத்தில் காணப்படுகிறது. சிவலிங்கத்துக்குக் கொன்றை மாலை சூட்டும் திருப்பணியில் ஈடுபட்டுள்ளதுபோல் இவ் வடிவம் வடிக்கப் பட்டுள்ளது. இடுப்பில் மடித்துக்கட்டிய எளிய ஆடையுடன், மெலிந்த திருமேனியாய்க் காணப்படும் இவ் வடிவத்தைச் சிவாச் சாரியாராகக் கொள்ளலாம். ஆனால் திரு. வேதாசலம் இவ் வடி வத்தைக் கண்டராதித்தர் என்று குறிப்பிட்டிருப்பது, அவர் இந்தச் சிற்பத் தொகுதியைப் பார்க்கவில்லையோ என்ற ஐயத்தைத் தரு கிறது. சிவலிங்கத்தைத் தொட்டபடி, அதற்கு மாலை சுற்றுவது போல் மன்னர் வடிவங்களை அமைக்கும் மரபு தமிழகத்தில் இருந்த தாகத் தெரியவில்லை. இறை கோயில்களில் மன்னர், அரசியர் வடிவங்களைப் படைக்கும்போது, அவர்கள் இறைவனைத் தொழுவது போல் கூப்பிய கரங்களுடன் இருக்கும் தோற்றத்தில்தான் படைப்பது வழக்கம். சிற்ப இலக்கணங்களும் அப்படித்தான் கூறுகின்றன. இந்தக் கோயிலில் சிவலிங்கத்தோடு காணப்படும் வடிவம் மன்னருக் குரிய ஆடையணிகள் ஏதுமின்றிக் கோவண ஆடையுடன் காணப் படுகிறது. கண்டராதித்தர் மன்னர் வடிவில் பிறந்தவர்; மன்ன ராகவே வாழ்ந்து மடிந்தவர். அவர் துறவறம் பூண்டதாக வரலாறு

இல்லை. இந்நிலையில் கோவண ஆடையை அணிந்து மெலிந்த உடலினராய் அவர் இருக்கவேண்டிய அவசியமென்ன? ஆக எப்படிப் பார்த்தாலும் சிவலிங்கத்தோடு காட்சியளிக்கும் இவ் வடிவம் கண்டராதித்தர் வடிவமில்லை என்பது தெளிவாகும்.

இனி இத் தொகுதியில் கிழக்கு நோக்கி இருக்கும் மூன்று மனித வடிவங்களைப் பார்ப்போம். இவற்றுள் முதல் வடிவமும் மூன்றும் வடிவமும் அமர்ந்த நிலையில் உள்ளன. நடுவிலுள்ள வடிவம் வலக்கையில் கவரியும் இடக்கையில் ஏந்திய வாளுமாய் நின்ற கோலத்தில் உள்ளது. இவ் வடிவங்களை ஒவ்வொன்ருய்ப் பார்ப்போம்.

சிவலிங்கத்தை நோக்கி முழங்காலை மடித்தபடி கூப்பிய கரங்களுடன் அமர்ந்திருக்கும் வடிவம் ஆணு? பெண்ணு? திரு. வேதாசலமும் திரு. பரணீதரனும் இவ் வடிவத்தைப் பெண் என்கிருர்கள். திரு. எஸ். ஆர். பாலசுப்பிரமணியம் இதைக் கண்டராதித்தர் என்கிருர். உடலமைப்பு, ஆடையணிகள், முகத்தோற்றம் இவற்றை வைத்து ஒரு சிற்பம் ஆணு பெண்ணு என்று கூறிவிடலாம். இன்னும் தெளிவாகச் சொல்லவேண்டுமானுல் மார்பகங்கள் உடைய சிற்பம் பெண். அஃது இல்லாத வடிவம் ஆண். ஏனென்ருல் சில ஆண் வடிவச் சிற்பங்கள், முகத்தோற்றத்தை மட்டும் வைத்துப் பார்த்தால் பெண்போலக் காட்சி தருவதுண்டு. ஆடையணிகளும் சில போதுகளில் சரியான வழிகாட்டா. எனவே சிற்பங்களை ஆண், பெண் என இனம் பிரிக்க மார்பக அமைப்புதான் ஒரே எளிய வழி. கோனேரி ராசபுரத்துச் சிற்பத் தொகுதியில் சிவலிங்கத்தை வழிபடுவ்துபோல் கைகூப்பி அமர்ந்த நிலையில் காணப்படும் வடிவத்துக்கு மகளிருக்கு இருக்கவேண்டிய மார்பகங்கள் இல்லை. ஆண்களைப் போல திரண்ட தட்டையான மார்புப்பகுதியே காணப்படுகிறது. உடைகளும் அணிகளும்கூட அரசிக்குரியனவாய் அமையாது, அரசர்க்குரியனவாய் அமைந்திருப்பது இன்ஞெரு சிறப்பு. இச் சிற்பத் தொகுதியின் கீழே ஒரு கல்வெட்டு காணப்படுகிறது. ''ஸ்வஸ்திஸ்ரீ கண்டராதித்த தேவர் தேவியார் மாதேவடிகளார் செம்பியன் மாதேவியார், தம்முடைய திருமகஞர் ஸ்ரீ மதுராந்தகரான, ஸ்ரீ உத்தமசோழன் திருராச்சியம் செய்தருளா நிற்கத் தம் உடையார் ஸ்ரீ கண்டராதித்த தேவர் திருநாமத்தால் திருநல்லம் உடையார்க்குத் திருக்கற்றளி எழுந்தருளுவித்து, இத்திருக்கற்றளியிலேயே திருநல்லம் உடையாரைத் திருவடி தொழுகின்ருராக எழுந்தருளிவித்த ஸ்ரீ கண்டராதித்த தேவர் இவர்.''

இக் கல்வெட்டிலேயே மிகத்தெளிவாகத் 'திருநல்லம் உடையாரின் திருவடி தொழுபவர் கண்டராதித்த தேவர்' என்று பொறிக்கப்பட்டிருக்கும்போது, வணங்கிய நிலையில் இருக்கும் வடிவத்தைச்

செம்பியன் மாதேவியென்று வேதாசலமும் பரணீதரனும் எப்படிச் சொல்கிறுர்கள்? திரு. பட்டாபிராமன் குறிக்கும் செம்பியன் மாதேவியின் வடிவம் எது? இதைத்தான் அவரும் குறிக்கிருர் என்ருல் அது எத்தனை தவருனது!

உடலமைப்பிலும் சரி, இச் சிற்பத்தொகுதியின் கீழுள்ள கல்வெட்டுக் குறிப்பிலும் சரி எங்குமே இதுதான் செம்பியன் மாதேவி என்பதற்கான சான்றுகள் காணப்படாத நிலையில், இவ் வடிவத்தைச் செம்பியன் மாதேவியாய்க் குறித்திருப்பது பொருத்தமற்றதாகும். அமர்ந்த நிலையில் இறைதொழும் இக் கம்பீரமான வடிவம் கண்டராதித்தர் என்பதில் யாதோர் ஐயமும் இனித் தேவையில்லை.

இனி இவ் வடிவத்தின் பின்னல் இருக்கும் இரண்டு வடிவங்களைப் பார்ப்போம்; ஒன்று நிற்கிறது; இன்னொன்று அமர்ந்துள்ளது. இதில் நிற்கும் வடிவத்தைத்தான் செம்பியன் மாதேவி என்று திரு. எஸ். ஆர். பாலசுப்பிரமணியம் குறிக்கிருர். இதை விடத் தவறு வேறெதுவும் இருக்க முடியாது. ஏனென்ருல் நிற்கும் வடிவம் ஆண் வடிவம் என்பதுடன். கோவண ஆடை அணிந்துள்ளது வலக்கையில் கவரியும் இடக்கையில் வாளும் கொண்டுள்ளது. தலை மொட்டையாகக் காட்டப்பட்டுள்ளது. இது காவற்காரனுக இருக்கலாமே தவிர எப்படிச் செம்பியன் மாதேவியாக இருக்க முடியும்? திரு. வேதாசலம் இவ் வடிவத்தைப் பணிப் பெண்களுள் ஒன்ருகக் குறிப்பிடுகிருர். கோவண ஆடையுடன் எந்தப் பணிப் பெண்ணும் இருக்க முடியாது. மேலும் வாளேந்திய பணிப் பெண் கூந்தலற்ற பணிப்பெண்......ஏன் இதெல்லாம். ஐயத்திற்கிடமின்றி இது ஆண் வடிவம். மார்பகங்களற்ற, கோவண ஆடையுடன் காணப்படும் இவ் வடிவத்தைப் பெண் வடிவம் என்று எப்படி இவர்களால் நினைக்க முடிந்தது என்பதுதான் தீராத வியப்பாக உள்ளது. அதிலும் இவ் வடிவத்தைப் பேரரசி செம்பியன் மாதேவியென்று திரு. எஸ். ஆர். பாலசுப்பிரமணியம் குறித்திருப்பது வேதனையைத் தருகிறது. திரு. எஸ். ஆர். பாலசுப்பிரமணியம் சோழர் கலைமுறையில் மிகத் தேர்ந்த பேறறிஞர். அவரது மகத்தான கலைப் பணிகள் மறக்க முடியாதவை. அப் பேறறிஞரே தவறியிருப்பதுதான் விந்தையாக உள்ளது. இதைக் கவனக் குறைவால் நேர்ந்த தவருகக் கருதலாமே தவிர வேறென்று. ஏனென்ருல் கண்ணுடையவர் யாருமே இவ் வடிவத்தைச் செம்பியன் மாதேவியென்று கூற மாட்டார்கள். இதற்குச் சிற்பக் கலையறிவோ கோயில் கலையறிவோ தேவையேயில்லை.

(தொடரும்)

---

# சிவவாக்கியர் தத்துவம்

[டாக்டர் மு. மாணிக்கம், எம். ஏ., பிஎச். டி.
தமிழ்ப்பேராசிரியர்,
அருள்மிகு பழனியாண்டவர் கலை, பண்பாட்டுக் கல்லூரி, பழனி.]

## பதினெண் சித்தர் :

அட்டமா சித்திகள் கைவரப்பெற்றவர் எல்லா நாடுகளிலும் உண்டு. தமிழகத்தில் சித்தர்கள் பலர் வாழ்ந்து வந்துள்ளனர். ''சுத்த மார்க்கத்தைச் சேர்ந்த மகேசுர சித்தர் பதினெண்மரும் தென்னகத்தைச் சேர்ந்தவர்களே. இவர்கள் பெயரை இடத்துக்கு இடம் வெவ்வேருகச் சொல்வார், பல்வேறு சம்பிரதாயங்களைச் சேர்ந்த அறுபதுக்கு மேற்பட்ட சித்தர் குழாத்திலிருந்து அவரவர்க்குத் தோன்றியவாறு பதினெண்மரைத் தேர்ந்து சொல்வார்கள். ஆகம வழி வந்த சைவ சமயம் சார்ந்த அப்பர், சம்பந்தர், சுந்தரர், மாணிக்கவாசகர், மற்றும் அவ்வை, திருமூலர், சிவவாக்கியர், பட்டினத்தார், பத்ரகிரியார், அருணகிரியார், அகப்பேய், பாம்பாட்டி, கடுவெளி, இடைக்காடர், குமார தேவர், முத்துத்தாண்டவர், இராமலிங்க சுவாமிகள்—இவர்கள் சுத்த மார்க்கத்தைச் சேர்ந்த ஞான சித்தர்கள் ; மரணம் இல்லாமலேயே பரவெளியில் மறைந்த இவர்களைத்தான் வித்தகச் சித்தர்கணம் என்பது'' என்று பேராசிரியர் கு. அருணுசலக் கவுண்டர் கூறுகிறுர்.

நவநாத சித்தர்கள், நவகோடி சித்தர்கள் என்றெல்லாம் கூறும் மரபு இருந்து வருகிறது. சித்தர்களிலே ஞான சித்தர்களே சிறந்தவராகக் கருதத்தக்கவர். அவர்களுக்கு அடுத்த நிலையில்தான் சரியை, கிரியை, யோகம் போன்றவற்றில் சிறந்த சித்தர்களைக் கூறலாம். எல்லாச் சித்தர்களுக்கும் தலைவர் அகத்தியர்.

## சித்தர் மரபு :

மரணம் என்பது யாவருக்கும் நேர்கிறது. பிணி, மூப்பு, இறப்பு என்னும் இம் மூன்றினுலும் மனிதன் இடர்ப்படுகிறுன். இம் மூன்றிலிருந்து மனிதன் விடுபட முடியாதா ? இந்த ஆராய்ச்சியைச் செய்து வழி கண்டுபிடித்தவர்தாம் சித்தர்கள். மரணத்தைத் தவிர்த்து இறப்பை நீண்டநாள் தள்ளிப் போடமுடியும் என்று கண்டு வழி சொன்னவர்கள் சித்தர்கள். பிணி, மூப்பைப் போக்கி என்றும் இளமையோடு இருக்க உடம்பைக் காயகல்பம் செய்தவர்கள்

சித்தர்கள். சாகாக்கலைபற்றிய ஆராய்ச்சி சித்தர்கள் செய்த ஆராய்ச்சி. இத்தகைய ஆராய்ச்சியில் ஈடுபட்டவர்கள் தமிழகத்தில் அகத்தியர், திருமூலர், சிவவாக்கியர் காலத்திலிருந்து சென்ற நூற்றாண்டில் வாழ்ந்த இராமலிங்க சுவாமிகள் வரை வாழ்ந்து வந்துள்ளனர்.

காலத்தை வெல்லும் ஆற்றல் படைத்தவர்கள் சித்தர்கள். காலனைக் கண்டு அஞ்சாதவரும் அவரே. உடலின் இன்றியமை யாமையை உணர்ந்து உடலைப் பேணும் வித்தையை உலகர்க்கு அறிவித்தவரும் அவரே. 'ஊனுடம்பு ஆலயம்' என்று கருதி உடம்பைப் பேணிக் காத்தனர். நல்லுடம்பிலேதான் இறைவன் இருக்கிறான் என்று கண்டவர் அவர்கள். உடம்பை வளர்த்தால் தான் உயிரை வளர்க்கமுடியும்; உயிரை வளர்த்தால்தான் இறைவன் உவந்து வந்து தங்குவான். இறைவன் இருப்பிடம் நம் உள்ளம் தான்.

சாதி, சமய, இன, மொழி, வட்டார பேதங்களைக் கடந்தவர் சித்தர்கள். இறையுணர்வு உடையவர்கள். ஆனால் பெரும்பாலும் இறைவனுக்குரிய புறக் கோலங்களுக்கு மதிப்புத்தராதவர்கள்; வேத ஆகமங்களை ஏற்றுக்கொள்ளாதவர்கள்; புராண இதிகாசங்களைக் கற்பனைக் கதைகள் என்று ஒதுக்கித் தள்ளுபவர்கள்; ஆன்ம நேய ஒருமைப்பாடு உள்ளவர்கள். உலகில் உள்ள உயிரனைத்தையும், பொருளனைத்தையும் இறைவனிருப்பிடமாகக் கொண்டு நேசிப் பவர்கள்.

எக்காலத்தவர்க்கும், எந்நாட்டவர்க்கும் நல்வழி காட்டும் ஒரே தத்துவம் சித்தர் தத்துவம். இதுவே சித்தர் மரபு. தமிழர் மரபும் இதுவே.

**சிவவாக்கியர் :**

சிவவாக்கியர் திருமூலர் காலத்தவர் அல்லது சற்றுப் பின்பு வாழ்ந்தவர் என்பர். திருமூலர் கி.பி. 5ஆம் நூற்றாண்டில் வாழ்ந் தவர் என்பது பெரும்பாலார் கொள்கை. எனவே சிவவாக்கியரும் அந்நூற்றாண்டைச் சார்ந்தவராகலாம். ஆனால் 'குலாமர்' போன்ற பிற்காலச் சொற்களும் சிவவாக்கியர் பாடல்களில் உள்ளதால் அவர் கி.பி. 12 ஆம் நூற்றாண்டுக்குப் பிற்பட்டவராகலாம் என்பாரும் உண்டு.

இவர் திருமழிசையிலே தோன்றிக் குறக்குடியிலே வளர்ந்தார். கூடைமுடைதல் இவருடைய சாதித்தொழில். தல யாத்திரை செய்து பல நாடுகளிலும், காடுகளிலும் சுற்றி அலைந்து சித்தராய்த்

திரும்பி வந்தார். அவ்வாறு சித்தராக வந்தவர் பேயாழ்வாரால் வைணவராக்கப்பட்டார் என்றும், வைணவரான பின்னர் பக்திசாரர் என்று பெயர் பெற்ருர் என்றும் கூறும் கருத்தை ஏற்பதற்கில்லே. அறிஞர் சிலர் இக் கதையை ஏற்றும் மறுத்தும் கூறியுள்ளனர். சித்தரான ஒருவர் வைணவரானுர் என்று கூறுவது சித்தர் யார் என்று அறியாதவர் கூற்ருகத்தான் கொள்ளவேண்டும். சமயங் கடந்தவர்கள் சித்தர்கள். அவர் மீண்டும் சமயப் படுகுழியுள் வீழ்ந் தார் என்று கூறுவது பொருத்தமாகப்படவில்லே. அல்லது வைண வராக இருந்து சித்தரானவர் சிவவாக்கியர் என்று வேண்டுமானுல் கூறலாம். ஏனென்ருல் இவர் அரி, அயன் இருவருக்கும் வேறுபாடு காணுதவர். ''அரியும் அல்ல அரனும் அல்ல அப்புறத்தில் அப்புறம்'' என்று இறைவனேக் குறித்து இவர் ஓரிடத்தில் பாடு கின்ருர்.

## கடவுட் கொள்கை:

உலகில் உள்ள பொருள் அனைத்திலும் இறைவன் எள்ளில் எண்ணெய் கலந்திருப்பது போலக் கலந்துள்ளான்:

*''உள்ளினும் புறம்பினும் உலகம் எங்கணும் பரந்து*
*எள்ளில் எண்ணெய் போலநின்று இயங்குகின்ற எம்பிரான்''*
*(சிவ : 282)*

ஐம்பூதங்களாக இறைவன் உள்ளான். ஆகாயத்தில் ஒரு பூதமாக, காற்றில் இரு பூதங்களாக, நெருப்பில் மூன்று பூதங்களாக, நீரில் நான்கு பூதங்களாக, பூமியில் ஐந்து பூதங்களாக அமர்ந் துள்ளான் இறைவன். பொதுவாக அண்டத்தில் உள்ள ஐந்து பூதங்களேயும் பிண்டமாகிய நம் உடலில் காணலாம் என்பர். அண்டத்தில் பிண்டமும் பிண்டத்தில் அண்டமும் கலந்துள்ளன. அனைத்துப் பூதங்களாகவும் இறைவன் உள்ளான் என்பதால் அனைத்துப் பூதங்களின் சேர்க்கையாகிய பிண்டமாம் நம் உடம்பில் இறைவன் அமர்ந்துள்ளான் என்று கூறலாம். இறைவன் ஐந்து பூதங்களாய்ப் பரவியுள்ள நிலேயை,

*''அந்தரத்தில் ஒன்றுமாய் அசைவுகால் இரண்டுமாய்*
*செந்தழலில் மூன்றுமாய்ச் சிறந்த அப்பு நான்குமாய்*
*ஐந்துபாரில் ஐந்துமாய் அமர்ந்திருந்த நாதன்'' (சிவ : 297)*

என்று கூறுகிருர். இறைவன் நாம் அன்ருடம் காணுகின்ற தந்தை யாகவும் தாயாகவும் தமராகவும் சகல தேவதைகளாகவும் விளங்கு கிருன். நம் சிந்தையும் சிந்தையின் தெளிவும் அவனே. சித்தி முத்திதானும் அவனே. விந்தும் அதன் விளேவும் அவனே. மேல

தாய வேதமும் அவனே. அவனே தன்னை ஆட்கொண்டதாகக் கூறுகிறார். (பாடல் 402). ''என்னை ஆண்ட ஈசன்'' என்கிறார். தம்முள் இறைவன் வந்து புகுந்துகொண்ட தன்மையைத் தெங்கில் நீர் புகுந்தவாறு போன்றது என்கிறார்,

*''ஐயன்வந்து மெய்யகம் புகுந்தவாறு அது எங்ஙனே?*
*செய்ய தெங்கு இளங்குரும்பை நீர்புகுந்த வண்ணமே''*
*(சிவ : 152)*

விண்ணில் உள்ள தேவர்கள் எல்லாம் அறிய முடியாத மெய்ப் பொருள் இறைவன். ஆனால் மண்ணில் எம் பிறப்பறுத்துத் தன் மலரடிகளை என் உள்ளத்தில் வைத்தான் என்கிறார். எனவே பிறவிப் பெருங்கடல் நீந்த இறைவனின் திருவடிகளாகிய புணை பயன்படு கிறது என்று சிவவாக்கியர் நம்புகிறார்.

இறைவன் உருவச்சிலைகளில் இல்லை. அவனைத் தேடி ஊர் ஊராக, நாடு நாடாகத் தேடி அலைபவர் மூடர். இறைவனை ஒவ்வொருவரும் அவரவர் உள்ளத்துளே இருப்பதை அறிந்துணர்தல் வேண்டும்,

*''ஊரும் நாடும் காடுமோடி உழன்று தேடும் ஊமைகாள்!*
*நேரதாக உம்முளே அறிந்துணர்ந்து நில்லுமே'' (சிவ : 11)*

கோயில்களிலோ குளங்களிலோ இறைவன் இருப்பதாகக் கருதிக் கோயில்களுக்கும் குளங்களுக்கும் சென்று தொழுதும் நீராடி யும் பயன் இல்லை. செங்கல், கருங்கல், சாதிலிங்கம், செம்பு போன்ற பொருள்களால் அமைத்த உருவங்களில் இறைவன் இல்லை. இருக்கு முதலாய நாலு வேதங்களை எழுத்துணர்ந்து ஓதினும் நெற்றியில் நீறு பூசினும் தொழுது அரற்றினும் அவற்றிலெல்லாம் இறைவன் இரான். . நெஞ்சில் உருக்கம் கொண்டு உள்கலந்து உண்மை கூற வல்லவரானல் சுருக்கமற்ற சோதியாம் இறை வனைக் கூடலாகும். உள்ளம் உருக வேண்டும். உண்மை பேச வேண்டும். அப்போது இறைவன் தானே வந்து நம் உள்ளத்தமர் வான். உள்ளம் உருகாதார் நெஞ்சிலும் உண்மை பேசாதார் நெஞ்சிலும் இறைவன் புகான். அவர்கள் வேதம் ஓதினும் நீறு பூசினும் பாழே.

## நட்ட கல்லும் தெய்வமோ ?

(விக்ரக ஆராதனை) உருவ வழிபாடு இந்து சமயத்தில் உள்ள முக்கியமான வழிபாட்டுமுறை. உருவ வழிபாட்டை நம்புவதால் பல பல தெய்வங்களையும் பல பல வடிவங்களையும் மக்கள் படைத்துள்ளனர். வேறு வேறு தெய்வத்தை வணங்குகின்ற வேறு வேறு மக்களிடையே

கருத்து வேறுபாடு இதனால்தான் ஏற்படுகிறது. கருத்து வேறுபாடே சமயப் போராகவும் உருவெடுக்கிறது. எனவே இவற்றையெல்லாம் நன்குணர்ந்த சிவவாக்கியர் உருவ வழிபாட்டை எதிர்க்கிறார். உருவ வழிபாடு அறியாமை என்கிறார். பூசை வழிபாடெல்லாம் வெளி வேடம் என்கிறார். நாதன் நம் உள்ளத்தில் இருக்கையில் நாம் நட்ட கல்லும் பேசுமோ? இறையுருவைச் சுற்றி வந்து முணமுணென்று சொல்லும் மந்திரத்தால் என்ன பயன்? சுட்ட சட்டி கறிச் சுவை அறியுமா? அறியாது. அதுபோல இறைவனைக் கல் அறியுமோ? அறியாது.

*''நட்டகல்லைத் தெய்வம் என்று நாலுபுட்பம் சாத்தியே*
*சுற்றிவந்து முணமுணென்று சொல்லுமந்திரம் ஏதடா?*
*நட்டகல்லும் பேசுமோ நாதன் உள் இருக்கையில்?*
*சுட்டசட்டி சட்டுவம் கறிச்சுவை அறியுமோ?'' (சிவ : 481)*

இறைவனைக் காணல் :

ஆசையே துன்பத்துக்கெல்லாம் காரணம் என்றார் புத்தர்.

*''ஆசை அறுமின்கள் ஆசை அறுமின்கள்*
*ஈசனோ டாயினும் ஆசை அறுமின்கள்''*

என்று திருமூலர் பாடினார்.

*''ஆசா நிகளம் துகளா யினபின்*
*பேசா அனுபூ திபிறந் ததுவே''*

என்றார் அருணகிரியார். எனவே ஆசையை விட்டவர்க்கே இறைவனைக் காண இயலும் என்பது சான்றோர் கொள்கை. சிவ வாக்கியரும் இறைவனைக் காணவேண்டுமாயின் வேட்கையைத் துறக்க வேண்டும் என்கிறார். வேட்கையைத் துறந்தால் இறைவனை விரைந்து காணலாகும் :

*''வேணுமென்று தேடுகின்ற வேட்கையைத் துறந்தபின்*
*வேணுமென்ற அப்பொருள் விரைந்து காணல் ஆகுமே''.*
*(சிவ : 130)*

வேட்கையைக் கைவிடுதல் எளிதா? இல்லை. ''ஆசைக் கோர் அளவில்லை அகிலமெல்லாம் கட்டி ஆளினும் கடல் மீதிலே ஆணை செலவே நினைவர்'' என்று தொடங்கும் தாயுமானார் பாடல் வேட்கையின் இயல்பினை எடுத்தியம்புகிறது. அப்படிப்பட்ட வேட் கையை விட்டவர்க்கே இறைவனைக் காண முடியும். ''அற்றது பற்றெனில் உற்றது வீடு''.

**பெண்ணை வெறுக்காமை :**

இல்வாழ்க்கையையும் விருந்து பேணலையும் சிவவாக்கியர் போற்றுகிறார். வரு விருந்தோடு உண்டு உடுத்தி மனையாளுடன் இன்ப வாழ்வு வாழ்ந்தால் விருந்தினனாகிய ஈசன் சிவத்தன்மையாம் முழுநிறை வாழ்வளிப்பன், என்கிறார். வள்ளுவரும் இல்வாழ்வான் என்பவனே துறந்தார்க்கும் துவ்வாதவர்க்கும் இறந்தார்க்கும் நல்லாற்றில் நின்ற துணை என்கிறார். ''இல்லறமல்லது நல்லறமன்று'' என்பர் ஔவையார். அறம் என்பதே இல்லறத்தைத்தான் குறிக்கும். வள்ளுவர் ''அறன் எனப்பட்டதே இல்வாழ்க்கை'' என்கிறார். எனவே இல்வாழ்க்கையைப் போற்றுபவர் யாரும் பெண்ணை வெறுக்க மாட்டார். போலித் துறவிகளே அவ்வாறு செய்வர். சிவவாக்கியர் ''மாதர் தோள் சேராத தேவர் இம் மாநிலத்தில் இல்லை. எல்லாத் தெய்வங்களும் மனைவியுடன்தான் காட்சி தருகின்றன. மாதர் தோள் புணர்ந்தால் மனிதர் வாழ்வு சிறக்கும். பெண்ணான சத்தி ஒன்று மாட்டிக்கொண்டதால் சிவனும் பார்வதி, கங்கை எனும் இருவரையும் மகிழ்ந்து ஏற்றுக்கொண்டான்'' என்கிறார். எனவே சிவவாக்கியர் பெண்ணை வெறுக்கவில்லை : இல்லறத்தை வெறுக்கவில்லை என்று தெரிகிறது.

*''மாதர்தோள் சேராததேவர் மாநிலத்தில் இல்லையே !*
*மாதர்தோள் புணர்ந்தபோது மனிதர் வாழ்வு சிறக்குமே,*
*மாதராகும் சத்தியொன்று மாட்டிக்கொண்டதாதலால்*
*மாதராகும் நீவி கங்கை மகிழ்ந்து கொண்டான் ஈசனே''*
(சிவ : 490)

**இறந்தவர் பிறப்பதில்லை :**

இறப்புண்டேல் பிறப்புண்டு என்பது யாவரும் சொல்லும் பொதுத் தத்துவம். ஆனால் சிவவாக்கியர் இறந்தவர் பிறப்பதில்லை என்கிறார். ஒருவர் பிறப்பது ஐம்பூதச் சேர்க்கையாலே. ஒருவர் இறந்தால் அவரது உடல் மீண்டும் அவ் ஐம்பூதங்களாகவே மாறி விடுகின்றன. அதனால் அவை மீண்டும் வேறு ஓர் உடலில் தோன்றுவதில்லை, என்ற கருத்தில் கூறுகிறார். பசுவின் பாலைக் கறந்தால் அது மீண்டும் பால் முலையில் போய்ப் புகாது. கடைந்தெடுத்த வெண்ணெய் மீண்டும் மோரில் கலக்காது. உடைந்து போன சங்கின் ஓசை மீண்டும் சங்கில் நுழையாது. உயிர்களும் உடலைவிட்டு நீங்கிய பின் மீண்டும் உடம்பில் புகா. விரிந்த பூக்களும் உதிர்ந்த காய்களும் மீண்டும் மரங்களில் போய்ப் பொருந்தா. அதே போல் இறந்தவர் மீண்டும் பிறப்பதில்லை. இவ்வாறு பல உவமைகளைக் கூறித் தம் கருத்தைத் தெளிவிக்கிறார். ''எல்லாப் பிறப்பும் பிறந்திளைத்தேன் எம்பெருமான்'' என்பார் மாணிக்கவாசகர், ''மாயப் பிறப்பறுக்கும் மன்னன்'' என்பார் இறைவனை. பிறவிப்

பெருங்கடல் என்றும் எழுமை எழுபிறப்பு என்றும் வள்ளுவர் கூறு கிருர். இவ்வாறு இறந்தவர் எல்லாம் மீண்டும் மீண்டும் பிறந் தவரே என்ற கொள்கையைப் பலரும் சொல்லியிருக்க சிவவாக்கியர் அதற்கு மாருக இறந்தவர் பிறப்பதில்லை என்று வலியுறுத்துவது அவரது தனிக்கொள்கையாக உள்ளது.

*''கறந்தபால் முலைபுகா; கடைந்த வெண்ணெய் மோர்புகா;*
*உடைந்துபோன சங்கிேைசை உயிர்களும் உடற்புகா ;*
*விரிந்த பூ உதிர்ந்தகாயும் மீண்டுபோய் மரம்புகா ;*
*இறந்தவர் பிறப்பதில்லை இல்லை இல்லை இல்லையே''*

(சிவ : 33)

**சாதி பேதம் இல்லை :**

*''சாதிகள் இல்லையடி பாப்பா—குலத்*
*தாழ்ச்சி உயர்ச்சி சொலல் பாவம்''*

என்று பாரதியார் பாடியுள்ளார். பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும் என்பார் வள்ளுவர். இட்டார் இடாதார் என்ற சாதி இரண் டொழிய வேறில்லை என்பார் ஔவையார். இன்றும் சாதி வேறு பாடு பார்க்கக்கூடாது என்று பேசும் அரசியல்வாதிகளும் சமயவாதி களும் நாளுக்குநாள் சாதி வேறுபாட்டை வளர்த்துக்கொண்டுதான் வருகின்றனர். தற்போது நடக்கும் சாதிப் பூசல்கள் போல முன்பு நடந்ததில்லை. சாதியை ஒழிப்பதாகப் பேசுபவர் அனைவரும் சாதி யுணர்வை வளர்த்துக்கொண்டுதாம் உள்ளனர். பிறப்பில் உயர்வு தாழ்வு இல்லை; பார்ப்பான், பறையன் இல்லை என்கிருர் சிவவாக் கியர். பறைச்சி என்றும் பார்ப்பனத்தி என்றும் உலகில் வேறுபாடு இல்லை. பறைச்சியிடம் கொள்ளும் போகமும், பார்ப்பனத்தியிடம் கொள்ளும் போகமும் வேறு வேருக இல்லை. இந்த வேறுபாடு எல்லாம் நம் உள்ளத்தில்தான் உள்ளது ; வெளியில் இல்லை.

*''பறைச்சி ஆவதேதடா? பனத்தி ஆவதேதடா?*
*இறைச்சி, தோல், எலும்பினும் இலக்கம் இட்டிருக்குதோ ?*
*பறைச்சி போகம் வேறதோ ? பனத்தி போகம் வேறதோ ?*
*பறைச்சியும் பனத்தியும் பகுத்துப்பாரும் உம்முள்ளே''*

(சிவ : 35)

**சமய ஒருமைப்பாடு :**

உலகம் முழுவதும் சமய வேறுபாடுகளால் அலைப்புண்டு வருவதை நாம் அறிவோம். மனிதன் தோன்றியது வாழ்வதற்குத் தானே யொழியச் சாதி, சமய வேறுபாடுகளால் ஒருவருக்கு ஒருவர் அடித்துக்கொண்டு சாவதற்காக அன்று. சிவவாக்கியர் காலத திலும் சாதி சமயச் சண்டைகள் இருந்திருக்கும். எனவே சமய பேதங்கள் பேசுபவர்கள் வாய்புழுத்து மாய்வர் என்று சினந்து மொழி கிருர். ஒருநாழி உப்பும் ஒரு நாழி நீரும் சேர்ந்தால் ஒருநாழி தான் இருக்குமே ஒழிய இருநாழி ஆகாது. அதுபோல சிவனும்

திருமாலும் ஒருவருக்குள் ஒருவராகத் திகழ்கிருரேயன்றி இருவரும் வேறு வேறு கடவுளல்லர். இருவரையும் வேறுபடுத்திப் பேசுபவர் வீண் நரகிலே வீழ்வர்.

> ''நாழி அப்பும் நாழிஉப்பும் நாழியான வாறுபோல்
> ஆழியோனும் ஈசனும் அமர்ந்து வாழ்ந்திருந்திடம்
> ஏறில்ஏறு ஈசனும் இயங்கு சக்ரதரனையும்
> வேறுகூறு பேசுவார் வீழ்வர் வீண்நரகிலே'' (சிவ : 50)

## இளமையுற்று நெடிது வாழலாம் :

பிணி, மூப்பு, சாக்காடு என்ற மூன்றும் மனித வர்க்கத்தைப் பெரிதும் துன்பத்தில் ஆழ்த்தி வந்துள்ளன. இம் மூன்றிலிருந்தும் விடுதலை பெறப் பலரும் வழிகாண முயன்றுள்ளர். சித்தர்கள் பிணி, மூப்பு, சாக்காடு ஆகிய மூன்றிலிருந்தும் விடுபட்டவர்கள். குண்டலினி சக்தியால் முதுமை நீங்கி இளமை உற்று நெடிதுநாள் வாழலாம் என்று சித்தர்கள் கண்டுளர். யோகப் பயிற்சியால் குண்டலினி சக்தியை எழுப்பிக் கபாலத்துக்குச் செலுத்தி நான்கு நாழி அவ்விடத்திலேயே அச் சோதியை நிலைபெறச் செய்தால் முதுமை நீங்கிப் பாலனாகி வாழலாம்; பரப்பிரம்மம் ஆகலாம். இது உண்மை.

> ''மூலநாடி தன்னிலே முளைத்தெழுந்த சோதியை
> நாலுநாழி உம்முளே நாடியே இருந்தபின்
> பாலனாகி வாழலாம் பரப்பிரம்மம் ஆகலாம்
> ஆலமுண்ட கண்டர் ஆணை அம்மை ஆணை உண்மையே''
> (சிவ : 65)

பல இடங்களில் சிவவாக்கியர் நாம் ''பாலனாகி வாழலாம் பரப் பிரம்மம் ஆகலாம்'' என்று கூறுகிருர். ஐந்தெழுத்து மந்திரத்தைப் பலவாறு வலியுறுத்துகிருர்.

## முடிவுரை :

''உலகின் அகச் சமயங்கள், புறச் சமயங்கள், கருத்துகள், கோட்பாடுகள், மாருட்டங்கள், போராட்டங்கள் நீக்கிய மதச் சந்தை களின் இரைச்சலுக்கப்பால் மாந்தனை மாந்தனுக்கும் அருளாட்சியே சிவவாக்கியர் செய்யுளின் சாரம்''[2] என்பார் கூற்று கருதற்பாலது. புதுமை விரும்பியாகவும் புரட்சிவாதியாகவும் திகழும் சிவவாக்கியர் இறையுணர்வுடையவராவார். அருள்நெறியே அவர் செந்நெறி.

## குறிப்புகள் :

1. கு. அருணாசலக்கவுண்டர், ''சித்தர் பாடலும் அவர்தம் தத்துவமும் ஒரு கண்ணோட்டம்,'' சித்தர் பாடல்கள், த. கோவேந்தன் பதிப்பு. பூம்புகார். பக். vii.
2. மேலது. பக். 2.

---

# ஆதீனங்கள் வளர்த்த அருந்தமிழ்

[புலவர் மு. சிவச்சந்திரன், எம். ஏ., பி. எட்.,
துணைப் பேராசிரியர்,
தருமையாதீனப் பல்கலைக் கல்லூரி, தருமபுரம்.]

(முன் இதழ் உக ஆம் பக்கத் தொடர்ச்சி)

**சூரியனார் கோயில் ஆதீனம்:**

சூரியனார் கோயில் ஆதீனம் கந்தப் பெருமானை முதல்வராகக் கொண்டது ஆதலால் அகச் சந்தானம் 'கந்த பரம்பரை' எனப்படும். சூரியனார் கோயில் ஆதீனப் பரம்பரையில் வந்த சிவாக்கிர யோகிகள் என்பார் குறிப்பிடத்தகுந்தவர். விசயநகரப் பேரரசு நம் நாட்டை ஆண்டுவந்த காலத்தில் தஞ்சையையும் சோழநாட்டையும் காத்து வந்தவர் சின்ன செல்லப்ப நாயக்கரும், அவரின் மகனான அச்சுதப்ப நாயக்கரும் ஆவார். செல்லப்ப நாயக்கர் சிவாக்கிர யோகிகளின் பெருமையைக் கேட்டு, யோகிகளை வணங்கித் தம்மிடத்து அழைத்துச் சென்று, பின்னர் அம் முனிவரின் விருப்பத்திற்கிணங்கத் திருவீழி மிழலைக்கு அனுப்பி வைத்தார். இச்சமயத்தில் சைவ சமயிகளாய் வாழும் மடாதிபதிகளும் மற்றுமுள்ள பிரம க்ஷத்திரிய வைசியர் அல்லாதாரும் சந்நியாசிகளாவதற்கு அருகர் அல்லர் என்று ஒரு முறைப்பாடு அரசனுக்கு எட்டியது. அவன், தான் போற்றி வரும் சிவாக்கிர யோகிகளிடம் சென்று இப் பெருவழக்கைத் தீர்த்துவைக்க வேண்டிக்கொண்டதாகவும் அம் முனிவர் அந்த முறைப்பாட்டை ஆராய்ந்து சைவர்களும் சந்நியாசம் பெறுவதற்கு உரிமை யுடையவர்கள் என்று ஆகமவாயிலாகத் தக்க பிரமாணங்களுடன் நிருபித்துக் காட்டினார். அரசன் இக் கருத்துகளை நூல் வடிவில் ஆக்கித்தர வேண்டும் என்று வேண்டினான். அதனை ஏற்று 'சைவ சந்நியாச பத்ததி' என்னும் (வடமொழி) நூலை அருளிச் செய்தார். இவர் அருளிய பிற நூல்கள் :—

கிரியோதீகை, சிவஞானபோத லகுடீகை, சிவஞான போத சிவாக்கிர பாஷ்யம், சைவ பரிபாஷை என்பன வடமொழி நூல்கள்.

தமிழில் இவர் அருளிய மூலநூல் சிவநெறிப் பிரகாசம். தமிழில் இவர் அருளிய உரைகள் :—சிவஞான சித்தியார் பரபக்க உரை, சுபக்க உரை ஆகியனவாம். வடமொழியில் அருளிய உரைகள் :—சர்வ ஞானோத்திரம், தேவிகாலோத்தரம், சுருதி

சுக்திமாலை என்பனவாம். இவ் வடமொழி நூல்களுக்குத் தமிழில் உரை அருளியுள்ளார்.

சிவநெறிப் பிரகாசம் என்னும் நூலுக்கு இவரின் சீடரான நந்தி சிவாக்கிர யோகிகள் ஓர் அரிய உரை அருளியுள்ளார்.

தமிழ்ச் சைவ மடாதிபதிகளும் சந்நியாசிகளாவதற்கு உரிமை உண்டு என்பதை வடமொழி ஆகமப் பிரமாணங்களை எடுத்துக் காட்டித் தக்க நேரத்தில் நூல்வழங்கிய பெருமை சூரியனூர் கோயில் ஆதீனத்திற்குண்டு.

அருந்தமிழை வளர்த்த ஆதீனங்களின் வரிசையில் குறிப்பிடத் தகுந்த ஆதீனங்கள் தருமபுர ஆதீனமும், திருவாவடுதுறை ஆதீனமும் ஆகும். திருப்பனந்தாள் ஸ்ரீகாசிமடம் தருமபுர ஆதீனத்தின் சீடர் மடம் என்னும் நிலையில் அத் திருமடத்தின் அரும்பணியும் இங்கே குறிப்பிடத்தக்கதாம்.

தருமபுர ஆதீனம்:

இற்றைக்கு 400 ஆண்டுகட்கு முன்பு அவதரித்து, மதுரை ஸ்ரீ சொக்கநாதப் பெருமானின் அருள் கைவரப் பெற்ற ஸ்ரீ குருஞான சம்பந்த சுவாமிகள் அவர்களால் தோற்றுவிக்கப்பெற்ற திருமடமே தருமபுர ஆதீனம். இவர்களின் குருவாக இறைவனால் குறித் துணர்த்தப் பெற்றவர், திருக்கயிலாய பரம்பரையில் வந்த கமலை ஸ்ரீ ஞானப்பிரகாசர் ஆவார். குருநாதரிடம் உபதேசம் பெற்று அவர் களின் ஆணையின் வண்ணம் ஸ்ரீ குருஞான சம்பந்தர் தருமை வந்து அங்குள்ள முனிபுங்கவர்களுக்கு ஞானோபதேசம் செய்துவந்தார். அவ்வமயம் எட்டு நூல்களை அருளிச்செய்தார். அவை:—(1) சொக்கநாத வெண்பா; (2) சொக்கநாதக்கலித்துறை; (3) ஞானப் பிரகாச மாலை; (4) நவரத்தின மாலை; (5) சிவபோக சாரம்; (6) திரிபதார்த்த ரூபாதி தசகாரிய அகவல்; (7) முத்திநிச்சயம்; (8) சோடச கலாபிரசாத சட்கம் என்பனவாகும். இவற்றில் சொக்கநாத வெண்பாவும் சொக்கநாதக் கலித்துறையும் சிவ தோத்திரங்கள். ஞானப்பிரகாசமாலை நவரத்தினமாலை என்னும் இரண்டும் குரு தோத்திரங்கள். சிவபோக சாரம், திரிபதார்த்த ரூபாதி தச காரிய அகவல், முத்திநிச்சயம் என்னும் மூன்றும் சைவசித்தாந்த ஞான சாத்திர நூல்கள். சோடசகலாப் பிரசாத சட்கம் என்னும் நூல் யோக நூல். ஞானாவரண விளக்கம், சிவபூசாபத்ததி என்னும் இரு நூல்களும் இவரால் அருளிச்செய்யப் பெற்றனவாகும்.

தோத்திர சாத்திரப் பாடல்களை அருளித் தமிழுக்கு அணி சேர்த்த அருளாளர்கள் வரிசையில் ஸ்ரீ குருஞான சம்பந்தப் பெரு

மானும் முக்கிய இடம் வகிக்கின்ருர். உலகியல் நோக்குடன் அமைந்த மிக எளிய சொற்களால் ஆன பாடல்கள் இவர் அருளிய பாடல்கள்.

உதாரணத்திற்கு ஒன்றைக் காண்போம். இன்று நம்மிடையே காணும் குறை ஒன்றுண்டு. அதாவது அருவருக்கத்தக்கதே உடல் என்பது தெரிந்தும்—அதனை எங்கும் உணர்த்தியும் வந்தாலும் அவ் வருவருப்பு நம் உடல்மீது நமக்கு வருவதில்லை. சொல்லில் இருக்கும் அறிவும் தெளிவும் செயலில் இல்லை, இந்நிலை ஏன்? என்னும் கேள்விக்கு ஸ்ரீ குருஞானசம்பந்தர் விடை தருகின்ருர். இன்னும் எத்துணை துன்பங்களை நாம் அனுபவிக்க வேண்டியுளதோ? யார் அறிவார்? என்பதால்தான் அருவருக்க வேண்டிய உடல் மீது ஆசை உடையராய் இருந்து உழல்கின்ரேம் என்று அருளிச் செய் கின்ருர். அப் பாடல்:—

''அருவருப்பே மெத்தியிடும் ஆகத்தைச் சற்றும்
அருவருக்கத் தோற்றுதில்லை ஐயோ—அருவருக்கத்
தோற்றியிடா தென்னலின் துய்ப்பித் தறுப்பதற்கோ
சாற்றியிடாய் சொக்கநா தா''

என்னும் இப்பாடல் சொக்கநாத வெண்பா என்னும் நூலில் உள்ளது.

இஞ்ஞாஞசிரியர் தம் குருநாதர்மீது கொண்டுள்ள பக்திக்கு ஞானப்பிரகாசமாலையின்கண்ணுள்ள ஒரு பாடல் மிகச் சிறந்த எடுத்துக்காட்டாகக் காணப்படுகிறது.

''கிடந்தாலும் ஞானப்ர காசனென் பேன்கிடந் தேஎழுந்து
படர்ந்தாலும் ஞானப்ர காசனென் பேன்பசி யோடுபிணி
அடர்ந்தாலும் ஞானப்ர காசனென் பேன்அந்த அந்தகனுர்
தொடர்ந்தாலும் ஞானப்ர காசனென் பேன்பிணைச்
சொல் இல்லையே''

இப் பாடலின்கண் ஸ்ரீ ஞானப்பிரகாசரின் திருப்பெயரைக் கூறுவ தல்லது எப்பொழுதும் தமக்கு வேறு ஒரு மந்திரம் இல்லை என்று அருளுகின்ருர் குருமுதல்வர். தருமபுர ஆதீனத் திருக்கூட்டத்து அடியவர்கள் அனுபூதிமான்கள் என்று கூறுவதற்கேற்ப இங்கே 16 ஒடுக்கங்கள் அமைந்துள்ளமையையும், குருமுதல்வர் ஸ்ரீகுருஞான சம்பந்தர் யோக நூலாகிய 'சோடசகலாப் பிராகச சட்கம்' என்னும் சிறந்த நூலை அருளிச் செய்தமையையும், இரண்டாவது குருமூர்த் திகள் ஸ்ரீஆனந்த பரவச தேசிகர் தம் குருநாதரின் திருக்கண் பார்வை யிலேயே நிட்டை கூடிவிட்டமையையும் சான்றுகளாகக் கொள்ள லாம்.

(தொடரும்)

---

# செய்திகள்

## இராசராச சோழன் முடிசூடிய 1000வது ஆண்டுவிழா

இராசராச சோழன் முடிசூடி 1000 ஆண்டுகள் ஆவதை முன்னிட்டுத் தஞ்சையில் இராசராசன் சிலைக்கு முடிசூட்டும் விழா செப்டம்பர்த் திங்கள் 16, 17ஆம் நாட்களில் மிகச் சிறப்பாக நடைபெற்றது. விழாவிற்குத் தமிழக முதல்வர் மாண்புமிகு டாக்டர் எம். ஜி. ஆர். தலைமை தாங்க, நிதியமைச்சர் மாண்புமிகு நாவலர் நெடுஞ்செழியன் வரவேற்புரை வழங்க, இந்தியத் தலைமை அமைச்சர் திருமதி இந்திரா காந்தி அவர்கள் இராசராசன் சிலைக்கு முடிசூட்டி விழாவினைத் தொடங்கிவைத்தார். இவ்விழாவினை யொட்டி நாட்டிய நிகழ்ச்சி, கவியரங்கம், பட்டி மன்றம் முதலியனவும் நடைபெற்றன. மாணவ—மாணவியர் ஊர்வலமும் நடைபெற்றது. நாவலர் நெடுஞ்செழியன் தலைமையில் நடைபெற்ற நிறைவு விழாவில் முனைவர் ம. பொ. சி. அவர்களும் மற்றும் பல அறிஞர்களும் உரையாற்றினர். அமைச்சர் மாண்புமிகு அரங்கநாயகம் நன்றி நவில விழா இனிது நிறைவுற்றது.

## பண்பாட்டுப் பலகணி தொடக்கவிழா

தமிழக அரசு. தமிழ் வளர்ச்சி—பண்பாட்டுத் துறையின் சார்பில் பண்பாட்டுப் பலகணி அமைப்பு செப்டம்பர் 26ஆம் நாள் சென்னை அரசு அருங்காட்சியாகக் கலையரங்கில் தமிழகக் கல்வி அமைச்சர் மாண்புமிகு. திரு. செ. அரங்கநாயகம் அவர்களால் தொடங்கிவைக்கப் பெற்றது.

வரவேற்புரையாற்றிய தமிழ் வளர்ச்சித்துறைச் செயலர் டாக்டர். ஔவை. து. நடராசன் அவர்கள் பண்பாட்டுப் பலகணியின் பணிகளைப் பற்றி விளக்கினர். திங்கள்தோறும் தமிழ்ப் பண்பாட்டை விளக்கும் இலக்கியம், நாட்டுப்புறப்பாடல், இசை, நடனம் போன்ற கலைநிகழ்ச்சிகள் இவ்வமைப்பின் சார்பில் நடைபெறும் என்றார். மங்கி வரும் தமிழ்நாட்டுக் கலைகளை ஊக்கப்படுத்துவதும் அக் கலைகளில் ஈடு பட்டுள்ள கலைஞர்களைப் போற்றுவதுமே இவ்வமைப்பின் நோக்க மென்றார்.

விழாவைத் தொடங்கிவைத்த கல்வி அமைச்சரவர்கள் தமிழ் நாட்டுப் பழங் கலைகள் பல போற்றுவாரற்று மங்கி வருகின்றன வென்றார். சங்கரதாச சுவாமிகள் நாடகங்களை அவர் காலத்தில் எப்படிப் பாடி நடித்தார்களோ அதேபோல் பாடி நடிக்கச்செய்ய வேண்டுமென்றார். பல நாட்டுப்புறக் கலைகளையும் வளர்க்க வேண்டும் என்று கூறினர்.

இப் பலகணியின் முதல் நிகழ்ச்சியாக அரசுக் கலைஞர் டாக்டர் பத்மா சுப்பிரமணியம் ‘தமிழிலக்கிய மெய்ப்பாட்டியல்’ என்னும் பொருள்பற்றி ஆடியும் பாடியும் காட்சியுரை நிகழ்த்தி வந்திருந்தோர் அனைவரையும் மெய்ம்மறக்கச் செய்தார்.

## திரு. இளமுருகு பொற்செல்விக்கு 'டாக்டர்' பட்டம்

ஆணும் பெண்ணும் சரிநிகராவர் என்பதை விளக்குமுகத்தான் தம் பெயருடன் மனைவியின் பெயரையும் இணைத்து வழங்கிவருபவரும், திராவிடர் இயக்கத்தில் பல்லாண்டு களாகத் தொடர்பும் பற்றும் கொண்ட வரும், 'அஞ்சுகம்' என்னும் திங்கள் இதழின் ஆசிரியரும், ஏறத்தாழ 100 சிறுகதைகள், 350 கட்டுரைகள், 7 ஓரங்க நாடகங்கள், இரண்டு முழு நாடகங்கள், ஆகியவற்றை எழுதிய வருமான **திரு. இளமுருகு பொற்செல்வி** அவர்கள் **"திருவள்ளுவர் புரட்சிக் காரரே"** என்னுந் தலைப்பில் திருக்குறளின் பழைய கருத்துகளை மறுத்துப் புதிய கருத்துகளைப் புகுத்தி எழுதிய இலக்கியக் கட்டுரைக்காக அமெரிக்காவி லுள்ள உலகப் பல்கலைக் கழகம் முனைவர் (டாக்டர்) பட்டத்தினை வழங்கிச் சிறப்பித்துள்ளது. இவ்வாசிரியர், 'தமிழ்ச் சுடர்' 'தமிழர் ஊழியன்' 'மக்களாட்சி' ஆகிய இதழ்களிலும் ஆசிரியராகப் பணியாற்றியுள்ளார். கலைஞர் தலைமையில் நடைபெற்ற அறப் போராட்டங்களில் பலமுறை சிறை சென்றவர். இத்தகைய அன்பர் இளமுருகு பொற்செல்வி அவர்கட்கு நமது வாழ்த்துகளையும் தெரிவித்துக் கொள்ளுகிறோம்.



## நீடாமங்கலம் இலக்கியத் தமிழ் வளர்ச்சிக் கழகம்

நீடாமங்கலம் இலக்கியத் தமிழ் வளர்ச்சிக் கழகத்தின் சார்பில், திருக்குறள், பாவேந்தர் பாடல்கள் வகுப்புத் தொடக்க விழா பாவலர் குடந்தை கோ அவர்கள் தலைமையில் நடைபெற்றது. திரு. கி. சேது இரத்தினம் வரவேற்புரை ஆற்றினார். திருவாளர்கள் இரா. கோவிந்த ராசன், புலவர் து. சம்புகேசன் ஆகியோர் உரையாற்றினர். டாக்டர் வேதராசன் நன்றி நவின்றார். அடுத்து திரு. சே. நடராசன் அவர்கள் தலைமையில் மன்றங்கள் தொடக்கவிழா நடைபெற்றது. சிறுவர் மன்றத்தைத் தொடங்கிவைத்த திரு சம்புகேசன் தம் மகன் நினைவாக ரூ. 100 வைப்பு நிதியாக வழங்கினார். எழுத்தாளர் மன்றத்தைக் கவிஞர் சுரதா அவர்கள் தொடங்கிவைத்தார். மாணவர் சிவசேது விற்கு இலக்கிய வளர்ச்சிக் கழகப் பரிசு வழங்கப்பட்டது. திரு. இளமுருகன் நன்றி கூறினார்.

**பட்டமளிப்பு:** உலகத்தமிழ்க் கழக நீடாமங்கலம் கிளையின் முதலாண்டு நிறைவு விழா உவமைக் கவிஞர் சுரதா அவர்கள் தலைமையில் நடைபெற்றது. மருத்துவர் மறையரசன், குடந்தைப் பாவலர் கோ, புலவர் ப. கண்ணையன், பாவலர் கௌமாரியடியார், சோ. இளமதி காந்தன், செல்வி செவ்வந்தி, ஆகியோர் பல்வேறு தலைப்புகளில் பாக்கள் பாடினர். புலவர் குடந்தை கதிர் தமிழ்வாணன் சிறப்புரை யாற்றினார். கவிஞர் சுரதா அவர்கள் மருத்துவர் மறையரசன் பணிகளைப் பாராட்டி **"மருத்துவப் பாவலர் மாமணி"** என்ற பட்டத்தை வழங்கிச்

சிறப்பித்தார். திரு. சித்தமல்லி சேகநாதன் நன்றிப் பா பாட விழா இனிது முடிந்தது.

## ஆறுமுகனார் பெயரன் பெயர் சூட்டு விழா

சை. சி. நூற்பதிப்புக் கழகத்தின் முன்னாள் உதவிக் கணக்காளரும், செந்தமிழ்ச் செல்வியின் வாழ்நாள் கையொப்ப உறுப்பினருமாகிய சூரன்குடி அ. ஆறுமுகம் அவர்களின் செல்வ மகள் மல்லிகா (சுப்பிரமணியம் மல்லிகா) 21—8—84 செவ்வாய்க் கிழமையன்று ஓர் ஆண்மகவினை ஈன்றெடுத்தார். 5—9—84இல் அம் மகவுக்குப் **பால்வண்ண நாதன்** எனப் பெயர் சூட்டும் விழா மிகச் சிறப்பாக நடைபெற்றது. பால்வண்ண நாதனைப் பெயரனாகப் பெற்றுத் தாத்தாவான திரு. சூரன்குடி ஆறுமுகம் அவர்கட்கும் சுப்பிரமணியம் மல்லிகாவுக்கும் அவர்தம் சேய்க்கும் செந்தமிழ்ச் செல்வி தனது வாழ்த்துகளைத் தெரிவித்துக் கொள்கிறாள்.

## முனைவர் தெ. பொ. மீ. சிலை திறப்பு விழா

மதுரை காமராசர் பல்கலைக் கழகத்தின் முதல் துணைவேந்தர் முனைவர் தெ. பொ. மீனாட்சி சுந்தரனாரின் உருவச் சிலையை 18—9—84இல், அப் பல்கலைக் கழக வளாகத்தில் தமிழக முதல்வர் புரட்சித்தலைவர் டாக்டர் எம். ஜி. ஆர். அவர்கள் திறந்துவைத்தார்கள். துணைவேந்தர் டாக்டர் இராமச்சந்திரன் சிலை திறப்புவிழாவிற்குத் தலைமை ஏற்றார்.

## திருக்குறள் மையம்

திருக்குறள் நெறிகளைப் பரப்புவது பற்றிய ஆய்வுக் கூட்டம் அண்மையில் சென்னையில் முனைவர் ஔவை நடராசன் அவர்களின் தலைமையில் நடைபெற்றது. கல்வி அமைச்சர் மாண்புமிகு அரங்கநாயகம் இதில் கலந்துகொண்டார். குழந்தைகள் முதல் முதியவர்கள் வரை அனைவரும் பின்பற்றும் வகையில் இந்த மையத்தின் பணிகள் அமையும் என்றும், இதன் இயக்குநராகத் திருக்குறளார் வீ. முனுசாமி அவர்கள் அமர்த்தப் பெறுவார் என்றும் கூறப்படுகிறது. தொலைபேசியில் ஓர் எண்ணைச் சுழற்றினால் திருக்குறளார் குறள் விளக்கம் தருவது போன்றதொரு முறையைக் கடைப்பிடிக்கலாம் என்றும் கூட்டத்தில் கருத்து வழங்கப் பட்டது.

## திருக்குறளார்க்குப் பாராட்டு விழா

தமிழக அரசின் பழங்கலை இயக்குநரும், தமிழ்நாட்டரசின் திருக்குறள் நெறிபரப்பு மையத்தின் இயக்குநருமான திருக்குறள் முனுசாமி அவர்களின் 71ஆவது பிறந்தநாளை முன்னிட்டு, 9—10—84 அன்று, சென்னை இராணி சீதையம்மாள் மண்டபத்தில் பாராட்டு விழா நடைபெற்றது. அண்ணாமலைப் பல்கலைக் கழக இணைவேந்தர் எம். ஏ. எம். இராமசாமி விழாவிற்குத் தலைமை ஏற்றார். மாண்புமிகு அமைச்சர்கள் அரங்கநாயகம், இராம. வீரப்பன் ஆகியோர் திருக்குறளார்க்குப் பொன்னாடை போர்த்திச் சிறப்பித்தனர். அறிஞர் பலர் வாழ்த்துரை வழங்கினர்.

## துணைவேந்தர் டாக்டர் வி. ஐ. சுப்பிரமணியம்

தமிழ்ப் பல்கலைக் கழகத்தின் முதல் துணைவேந்தராய் இருந்த உயர்திரு. டாக்டர் வி. ஐ. சுப்பிரமணியம் அவர்கள் மீண்டும் அப் பல்கலைக் கழகத் துணைவேந்தராக இரண்டாம் முறை பதவியேற்ற செய்தியறிந்து மகிழ்கிறோம். துணைவேந்தர் அவர்களை வருக! வாழ்க! என வாழ்த்துகிறோம்.

தமிழ்ப் பல்கலைக் கழகம் என்னென்ன வகைகளிலெல்லாம் வளர வேண்டுமென்று திட்டமிட்டாரோ அவ்வவ் வழிகளில் வளர மேலும் அவர் உழைக்கத் தமிழக அரசு வாய்ப்பு ஏற்படுத்திக் கொடுத்தமை பாராட்டுக்குரியது. உழைப்புக்கு அஞ்சாதவர். தம்மைப்போல் பிறரும் உழைக்க வேண்டுமென்று எதிர்பார்ப்பவர். அவர் உழைப்பு உறுதியாக வெற்றிபெறும் என்று நம்புகிறோம். —ஆசிரியர்

## மறைமலையடிகள் நூலக வளர்ச்சிக்கு நன்கொடை

(சிலம்பு ௫௬, ௩௬ ஆம் பக்கத் தொடர்ச்சி)

| | | |
|---|---|---|
| உயர்திரு. இரா. முத்துக்குமாரசாமி அவர்கள் (கழக ஆட்சியர்) | 10 | 00 |
| திரு. ஆ. சுப்பையா பிள்ளை அவர்கள் (கழக மேலாளர்) | 5 | 00 |
| கயப்பாக்கம் திரு. முத்துலிங்கா ரெட்டியார் அவர்கள் | 5 | 00 |
| திரு. A. T. A. ஈஸ்வர் அவர்கள் | 5 | 00 |
| திருமுருக விசாக நம்பி அவர்கள் | 5 | 00 |
| சூரன்குடி திரு. அ. ஆறுமுகம் அவர்கள் (பெயரன் பால்வண்ணநாதன் பெயர் சூட்டு விழா நன்கொடை) | 25 | 00 |
| கல்லை. தே. கண்ணன் அவர்கள் (ஆசிரியர் வள்ளுவர்வழி) | 5 | 00 |
| திரு. அ. நாராயணசாமி | 5 | 00 |

---

# மதிப்புரை

## சங்க இலக்கிய வரலாறு

[ஆசிரியர்: க. சண்முக சுந்தரம், தமிழ் ஆய்வகம், 97, பஜனை கோயில் தெரு, சூளைமேடு, சென்னை-94, விலை: உரு. 15-00.]

இந்நாளில் சங்க இலக்கியங்களை ஆய்ந்து அறிஞர் பலர், கட்டுரைகளும் நூல்களும் எழுதி வருகின்றனர். பொதுவாக ஆய்வு நூல்கள் என்றால், புதிதாக அவற்றில் என்ன கூறப்படுகிறது என்று பார்ப்பது தான் அறிவுலகின் இயல்பு. அதற்கேற்ப, திரு. சண்முக சுந்தரம் அவர்கள் எழுதியிருக்கும் இந்த ஆய்வு நூலில் பல புதிய கருத்துகள் காணக் கிடக்கின்றன. இவ் வாசிரியர் சங்க காலப் புலவர்களைப்பற்றி

யும் மன்னர்களைப்பற்றியும் பலபுதிய செய்திகளைத் தெரிவிக்கிறார். சிலப் பதிகாரம், மணிமேகலை ஆகிய நூல்களையும் சங்க இலக்கியங்களையும் ஒப்பிட்டுக் கூறும் சில புதிய செய்திகள் ஆராய்ச்சியாளர்க்கு நல் விருந் தாகும். கண்ணகி வழிபாடே மாரியம்மன் வழிபாடாக மாறியுள்ளது என்று கூறும் கூற்றும், கண்ணகி—மணிமேகலை—யேசு என்ற தலைப் பில் வரும் செய்திகளும் புதியவை. தெய்வங்கள் மாவிடராக வருதல், ஆவியுலகச் செய்திகள் இன்ன பிற ஆராய்ச்சியாளர்களின் சிந்தனைக் குரியவை. இந் நூலாசிரியரின் ஆராய்ச்சித் திறன் பாராட்டுக் குரியது.

## நாளைகள் மலரட்டும்

[ஆசிரியர்: கி. சு. கிருஷ்ணசாமி, எம்.ஏ., எம்.ஃபில்., சுருளி பதிப்பகம், சின்ன ஓவுலாபுரம், சின்னமனூர், மதுரை மாவட்டம். கிடைக்குமிடம், 177 பூந்தமல்லி நெடுஞ்சாலை, சென்னை-10, விலை: உரு. 6-00.]

பழமையை வழியனுப்பிப் புதுமையை வரவேற்கும் கருத்தில் கவிஞரும் வரலாற்றுப் பேராசிரியருமான கி. சு. கிருஷ்ணசாமி அவர்கள் “நாளைகள் மலரட்டும்” என்ற தலைப்பில் இக் கவிதைத் தொகுப்பினை உருவாக்கியுள்ளார். புதுக் கவிதை முறையினைக் கடைப் பிடித்து அரிய இனிய கருத்துக் கோவையினைத் தருகிறார். கவிதைகள் சுவையும் பயனும் உடையவை.

## தமிழ்ச் சான்றோர் திரு. வி. க. கலம்பகம்

[ஆக்கியோன்: மருத்துவர் மறையரசன் ம.இ.அ.இ., வளர்தமிழ்ப் பதிப்பகம், கிடாமங்கலம், தஞ்சைமாவட்டம்-614 404. விலை: உரு. 3-00.]

தமிழ்த் தென்றல் திரு. வி. க. அவர்களைப்பற்றி அறிஞர்கள் பல திருப்பங்களினின்று பல கருத்துகளைத் தெரிவித்து வருகின்றனர். அவ் வகையில் மருத்துவர் மறையரசன் அவர்கள் ஒரு புதுத் திருப்பத்தைக் கையாண்டு கவிதை நடையில் இனிமை, எளிமை, சொல்வன்மை, கருத் தாழம் நிரம்பிய இக் கலம்பகத்தை உருவாக்கியுள்ளார். இந் நூல் திரு வாரூர் இயற்றமிழ்ப் பயிற்றக வெளியீடாக வந்துள்ளது. திரு. வி. க. அவர்களின் புகழ் பரப்பிவரும் இப் பதிப்பகத்தாரின் முயற்சி பாராட் டத்தக்கது.

---

தென்னிந்திய தமிழ்ச் சங்கத்திற்காக
80, பிரகாசம் சாலை, சென்னை-108. அப்பர் அச்சகத்தில்
திரு. இரா. முத்துக்குமாரசாமி அவர்களால் அச்சிடப்பெற்றது.
ஆசிரியர்: இரா. முத்துக்குமாரசாமி. எம். ஏ., பி. லிப்.

அப்பர் அச்சகம், சென்னை-108.